# கல்கி

பொங்கல் சிறப்பிதழ்

KALKI 13.1.1974 50 காசு





# *What's this sign a symbol for?*

New ideas in engineering. They originate at L&T where skilled engineers design, manufacture and install plant and equipment for major industries—chemical and pharmaceutical, food and dairy, minerals and oil, pulp and paper, steel and cement, power and irrigation. The L&T sign also symbolises complete plant construction based on process know-how from clients and collaborators—plants seen through from greenfield site to final commissioning. In short, the L&T sign symbolises the development of every vital industry in India.

**LARSEN & TOUBRO LIMITED** P.O. Box, 278, Bombay 1.

Shilpi HPMA 36a/73 Tam

# வலிமிகுந்த தலைவலிக்கு
# மிக விரைந்த விடுதலை!



ஒரே ஒரு

# அவேதன்®

ப்ளஸ்



SQUIBB ® ®

SARABHAI CHEMICALS PVT LTD

® இ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். எஸ்.பி.பி.எம். இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

சக்தி வாய்ந்தது,
விரைந்து
செயல்படுவது
அவேதன் ப்ளஸ்

# கல்கி

## பொங்கல் சிறப்பிதழ்

### பொருளடக்கம்

பிரமாதீச, மார்கழி, 29 - ஜனவரி 13, '74




| கல்கி - சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 26-00 | ரூ. 13-00 |
| இதர நாடுகள் | ரூ. 55-00 | ரூ. 27-50 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 30-00 | ரூ. 15-00 |






# வாய்நாற்றம் உங்களை விலகி நிற்கச் செய்கிறது...

காலகேட் ஒன்று சேர்க்கிறது

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள். நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.
அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி — கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே,
**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும்விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**



கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



மலர் 33 -- இதழ் 24

# மருந்து போதாது, டானிக்கும் வேண்டும்!

நாட்டில் நிலவும் பொருளாதார நெருக்கடி நிலைமையை உத்தேசித்து வேலைநிறுத்தம் செய்யும் உரிமையைத் தாங்களாகவே சிறிது காலத்துக்கு விட்டுக் கொடுக்க வேண்டும் என்று தொழிலாளர் சமூகத்தைப் பிரதமர் இந்திராகாந்தி தமது புத்தாண்டு உரையில் கேட்டுக் கொண்டார். இவ்வேண்டுகோள் எவ்வளவு தூரம் தொழிலாளர் சமூகத்தை நெகிழச் செய்துள்ளது என்பது சந்தேகமே. இடது சாரித் தொழிலாளர் தலைவர்கள் உடனடியாகவே 'முடியாது' என்று மறுப்புத் தெரிவித்துள்ளனர்.

தொழிலாளர்களின் உரிமைகளுக்காகப் போராடும் தொழிற்சங்கத் தலைவர்களுக்கு உழைப்பின் சிறப்பை அவர்களுக்கு உணர்த்த வேண்டிய கடமையும் உண்டு. இந்தப் பொறுப்பை நமது தொழிற்சங்கத் தலைவர்களில் பெரும்பாலோர் மறந்து விடுகின்றனர். இதுவே ஜப்பான் போன்ற துரித முன்னேற்றமடையும் நாடுகளுக்கும் நமக்கும் உள்ள வித்தியாசம். தொழிற்சங்கத் தலைவர்கள் நாட்டின் பொருளாதாரத்தையும், தொழில் வளர்ச்சியையும் ஊக்குவிக்கவும் வளர்க்கவும் கடமைப்பட்டவர்கள். இதில் அவர்கள் தவறிவிடுவதால் தோன்றியுள்ளதுதான் பரவலாகக் காணப்படும் உற்பத்திச் சுணக்கமும், பற்றுக்குறையும், மக்களுக்கு ஏற்பட்டுள்ள கஷ்டங்களும். உற்பத்தியைப் பெருக விடாமல் பஞ்சப்படி, சம்பள உயர்வு, போனஸ் போன்ற கோரிக்கைகளால் செலவுகளை மட்டும் உயர்த்திக் கொண்டே போகும் நிலைமையை உண்டாக்கியுள்ளனர். இதன் விளைவுதான் விலைவாசி உயர்வு. கடமை, உரிமை இரண்டையும் ஏற்றத் தாழ்வின்றி ஆற்றுதல் இப்பொழுதுள்ள நாட்டுச் சூழ்நிலையில் மிகஅவசியம்.

உரிமைகள் உண்டு என்பதைத் தொழிலதிபர்களாகட்டும், மக்களாகட்டும், யாரும், எப்போதும் மறுத்தல் இல்லை. சுதந்திரச் சமூகத்தில் சுதந்திரமாகத் தொழில் நடத்தும் உரிமை இருப்பது போலவே சுதந்திரத் தொழிலாளர் சங்கங்களும், அவற்றின் வேலைநிறுத்தம் செய்வது போன்ற உரிமைகளும் இருக்கத்தான் வேண்டும். இவ்விரண்டும் இல்லையானால் இது சுதந்திர நாடாகாது. ஆனால் உரிமைகள் எங்கெங்கே உண்டோ அங்கெல்லாம் கடமைகளும் உண்டு என்ற உண்மையையும், இக் கடமைகளைக் குறைவின்றி ஆற்ற வேண்டும் என்பதையும் மறக்கலாகாது. தொழிலதிபர்களும் இதே கடமை உணர்ச்சியால் உந்தப்பட்டுக் கிளர்ச்சிகள் தோன்று முன்பே தங்களது பொறுப்பை நிறைவேற்றி வைக்க வேண்டும். இவை யெல்லாம் ஜனநாயக மரபுகள். இம்மரபுப்படிதான் பிரதமரும் வேலைநிறுத்தங்களுக்குத் தடை விதிப்பது பற்றிப் பேசாமல் அந்த உரிமைகளைத் 'தாங்களாகவே விட்டுக்கொடுக்க வேண்டும்' என்று கூறியுள்ளார்.

பத்திரிகைகள் மூலமும், மேடைப் பேச்சுக்கள் மூலமும் பிரதமர் வேண்டுகோள் விடுத்தால் மட்டும் நிலைமை சீர்திருந்தி விடாது. இதில் அரசாங்கமே கவனித்து ஆவன செய்ய வேண்டிய மற்றொரு அம்சமும் உண்டு. வேலை நிறுத்தங்கள் ஏன் ஏற்படுகின்றன என்று ஆராயப் போனால் நம் பொருளாதாரக் கொள்கைகளின் அடிப்படைப் பலவீனங்களே காரணம் எனத் தெரிய வரும். வறட்டுச் சித்தாந்தங்களைப் பற்றிக் கொண்டு பிடிவாதம் செய்யாமல் பிரத்யட்ச நோக்கில் சுதந்திரப் பொருளாதாரக் கொள்கைகளை நாட்டின் முன்னேற்றத்தை உத்தேசித்து அமுல்படுத்தினால் உற்பத்திப் பெருக்கமும் நிகழும்; விலைவாசி உயர்வதும் கட்டுப்படுத்தப்படும்; தொழிலாளர்களின் கஷ்டங்களுக்கும் விடிவுகாலம் ஏற்படும். அப்போது வேலைநிறுத்தங்கள் தாமாகவே குறைந்து அடங்கிப் போகும். மருந்து போதாது. டானிக்கும் வேண்டும். அப்போதுதான் நோயுற்றிருக்கும் நமது பொருளாதாரம் ஆரோக்கியம் அடையும்.

## தமிழ்நாட்டிலே

தீரன்

### ஜி. டி. நாயுடு

கோவை அளித்த அற்புத மனிதர் திரு ஜி. டி. நாயுடுவின் மறைவு தமிழ்நாட்டுக்கு ஏற்பட்ட மாபெரும் இழப்பாகும். அவர் பிறவி மேதை. தொழில் நுட்ப உயர் கல்வி கற்காமலே, பொறி இயல் நுணுக்கங்களை அனுபவ வாயிலாகவே அறிந்து, அவற்றைக் கொண்டு பல தொழில்களை அமைத்து, தாம்



மூலிகைகளை ஒரு கரத்திலும் அதிலிருந்து தயாரான ஔஷதத்தை மற்றொரு கையிலும் வைத்துக் கொண்டு பேசுகிறார் திரு ஜி. டி. நாயுடு.

திருப்தியடைந்ததோடு நில்லாது பல இளைஞர்களுக்குத் தொழிற் கல்வியும் பயிற்சியும் அளித்து, அவர்களைச் சுதந்திரச் சிறு தொழிலதிபர்களாக ஆக்கிய பெருமை படைத்தவர் ஜி. டி. நாயுடு. பஞ்சுத் தரகராக எளிய முறையில் தொழில் ஆரம்பித்து, பிறகு படிப் படியாக, மோட்டார் தொழிலில் புகுந்து, இதர தொழில்களுக்கும் அதிபரானார். ஆனால் மோட்டார் தொழிலுடன்தான் ஜி. டி. நாயுடு அவர்களின் பெயர் இணைக்கப்பட்டு நிலைத்து விட்டது. மோட்டார்த் துறையில் அவருக்குத் தெரியாதது ஒன்றுமே இல்லை எனலாம். தொழிலைத் தவிர, ஆயுர்வேத, சித்த வைத்தியத்திலும், கடைசி நாட்களில் சிறு வீடுகளைக் குறைந்த செலவில் கட்டுவதிலும் சிரத்தை காட்டினார். கண் பார்த்தால் கை செய்யும் சாமர்த்தியமுள்ளவர். எதையும் தமக்கே உரித்தான புதுமை முறையில் செய்யும் இயல்பு கொண்டவர். எதற்கும் அஞ்சாத தைரியசாலி. அவர் திறமையை எல்லோரும் மெச்சினாலும், அரசாங்கத்தின் ஆதரவோ, பாராட்டுக்களோ அவருக்கு வாய்க்கவில்லை. வருமான வரி இலாகாவுடன் அவருக்கு இருந்த பிணக்கு பிரசித்தம். ''நான் ஒருவன்தான் வரி கொடுக்காத நியாயமான மனிதன்'' என்றும், ''கறுப்புப் பணத்தைப் பற்றி எனக்குத்தான் பேச உரிமை உண்டு, ஏனெனில் அதைப் பற்றி எனக்கு எல்லாம் அனுபவ பூர்வமாகத் தெரியும்'' என்றும் தொழிலதிபர்கள் கூட்டங்களில் தைரியத்துடன் சொல்லியிருக்கிறார்.

எளிய வாழ்க்கையில் மிளிர்ந்த பெரிய தொழிலதிபரை இழந்து துக்கத்திலாழ்ந்துள்ள அன்னாரது குடும்பத்தினருக்கு எமது அனுதாபங்கள். ஜி. டி. நாயுடு மறைந்தாலும் தமிழர் நெஞ்சங்களில் நீண்ட காலம் நிலைத்திருப்பார்.

### பாண்டிச்சேரியில் தி. மு. க. சரிகிறது

1974வது ஆண்டு பிறக்கும்போதே தி. மு. க.வுக்கு அபசகுனங்களும் துர்நிமித்தங்களும் தோன்றி விட்டன. தேர்தல்களிலோ, உப தேர்தல்களிலோ, தி.மு.க.வை நம்பிக் கூட்டுச் சேர எந்தக் கட்சியும் இன்று தயாராக இல்லை. தி. மு. க. வை ஆட்சியிலிருந்து இறக்க முடிந்தவர்கள் என்று மக்கள் யார் யாரை நம்புகிறார்களோ அவர்களோடு கூட்டுச் சேர்வதற்கே எல்லாக் கட்சிகளும் போட்டி போடுகின்றன. பாண்டிச்சேரி இதற்குச் சரியான முன்னடையாளம் ஆகிவிட்டது.

---

### ராஜாஜி சிந்தனை

சுகமும் துக்கமும் ஒன்றாகப் பாவித்தலே யோக முறை. இரண்டுக்குள்ளும் அதிக வேறுபாட்டை உணரலாகாது என்பது முனிவர்களின் உபதேசம். இந்த வேதாந்தக் கொள்கைக்கு ஒத்தவாறு தெய்வங்களில் வறுமையும் துக்கமும் தருபவளை மூத்த சகோதரியாகவும், செல்வமும் சுகமும் தருபவளை இளைய சகோதரியாகவும் அமைத்துக் கொண்டிருக்கிறோம். சுகம் தரும் தெய்வமும், துக்கம் தரும் தெய்வமும் கூடப் பிறந்த சகோதரிகள். மூதேவி துக்கத்துக்கு நாயகி. ஸ்ரீதேவி செல்வத்துக்கு நாயகி.

பொறுமைப்படுகிறவனை ஸ்ரீதேவி பொறுக்க மாட்டாள். தன் அக்காளிடம் ஒப்புவித்து விடுவாள். அதன் மேல் அவன் செல்வமும் சந்தோஷமும் குறைந்து போய்ச் சூன்யமாகும்.

கவலைப்படாதே! தைரியமாயிரு! இன்னும் அதிகமாகவே கஷ்டங்கள் வரும்! அப்பவும் நீ சிரிக்கணும்னு வாழ்த்தறேன்!

பொதுஜனம்

சித்திர வருஷப் பொருளாதாரம்

பிரதமரின் புத்தாண்டு வாழ்த்து!

எண்ணெய் இறக்குமதி

வேலை நிறுத்தங்கள்

பொருளாதாரக் கோளாறுபடிகள்

உற்பத்திச் சுணக்கம்

கவலைப்படாதீங்க! அலை ஓய்ந்ததும் அரபு நாடுகளுக்கு நம் கப்பல் புறப்படும்!

பில்
ஒரு ஆண்டுக்கு
ரூ 1500
கோடி

அரபு நாடுகள்

ஏற்றுமதி

வர்த்தக மந்திரி









**வித்வத் சதஸ்**

1. மியூஸிக் அகாடமி சதஸுக்கு இவ்வாண்டு தலைமைவகித்த திருவாங்கூர் இளைய மகாராஜா மார்த்தாண்ட வர்மா நடன அரசி ஸ்ரீமதி பால சரஸ்வதிக்கு 'சங்கீத கலாநிதி' விருது வழங்கிக் கௌரவிக்கிறார். 2. வீணை ஷண்முகவடிவு நினைவாக வீணைப் பரிசை இளைய மகாராஜா ஸ்ரீமதி வித்யா சங்கருக்கு வழங்குகிறார். 3. சங்கீத கலாநிதிக்கு இசைப் பேரறிஞர் மாலை அணிவிக்கிறார். 4. சதஸின் போது கர்நாடக சங்கீதக் கல்லூரி முதல்வர் ஸ்ரீ சந்தியாவந்தனம் சீனிவாச ராவ், (படம்) நடன ஆசிரியர் பந்தநல்லூர் எம். முத்தையா பிள்ளை, சங்கீத வித்வான் மைசூர் கிருஷ்ண அய்யங்கார் ஆகியோருக்கு இளைய மகாராஜா தகுதிச் சான்றிதழ்கள் வழங்கிச் சிறப்பித்தார்.

---

1973ம் ஆண்டின் இறுதி மாதத்தில் இறுதித் தேதிகளில் பாண்டிச்சேரி அமைச்சர்களில் இருவரும், சட்டமன்ற உறுப்பினர் ஒருவரும் தி. மு. க.விலிருந்து விலகி அ. தி. மு. க.வில் சேர்ந்ததன் காரணமாகப் பாண்டிச்சேரியில் தி. மு. க. மந்திரி சபை கவிழ்ந்து போய்த் தேர்தலுக்கு முன்பாக அங்கு ஜனாதிபதி ஆட்சி வர நேர்கிற சூழ்நிலை உருவாகி விட்டது. அமைச்சர்கள் இருவரும், சட்டமன்ற உறுப்பினர் ஒருவரும் தி. மு. க.விலிருந்து விலகி அ. தி. மு. க.வில் சேர்ந்ததைப் பற்றிப் பத்திரிகை நிருபர்கள் தமிழக முதல்வரும் தி.மு. க.வின் தலைவரும் ஆகிய திரு கருணாநிதியைச் சந்தித்துக் கேட்டபோது, ''அவர்கள் இராஜிநாமாச் செய்திருப்பதைக் குறித்து நான் அதிர்ச்சி யடையவில்லை. இது நான் முன்பே எதிர்பார்த்ததுதான். இருக்கிறவரை பதவியை முழுமையாக அனுபவித்து விட்டுப் போகிற அவர்களது கெட்டிக்காரத்தனத்தைப் பாராட்டுகிறேன்'' என்று பதில் கூறிச் சமாளித்திருக்கிறார். தமிழகத்திலும் தேர்தல் நெருங்கும்போது இப்படிப் பலருடைய கெட்டிக்காரத்தனத்தைப் பாராட்டுகிற வாய்ப்பு முதல்வருக்கு ஏற்படும் என்றே தெரிகிறது.

## ஏழே நாளில் ஒரு வீடு

திரு கே. என். சீநிவாசன் என்னும் கட்டிடக் கலை வல்லுநர் சென்னையில் டிசம்பர் மாத இறுதியில் 'ஆபட்ஸ்பரி'யில் ஒரு கண்காட்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார். இந்தக் கண்காட்சியில் சிக்கனமான விதத்தில் மிகவும் குறைந்த சிமெண்டை உபயோகித்து ஏழே நாளில் கட்டப்பட்ட வீடு ஒன்று பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தது. சிறிய அளவான குடும்பத்துக்கு வேண்டிய எல்லா வசதிகளும் உள்ள இந்த வீட்டைக் கட்டி முடிக்க எட்டாயிரத்து முந்நூற்று எழுபது ரூபாய்தான் செலவு ஆகியிருக்கிறதாம். இந்த வீட்டில் இரும்பு எதுவும் உபயோகப்படுத்தப்படவில்லை என்று தெரிகிறது. வீடு பார்ப்பதற்குக் கச்சிதமாகவும், அழகாகவும் இருக்கிறது. ஏழு மாதங்கள் அலைந்தாலும் வாடகைக்கு ஒரு வீட்டைக் கண்டுபிடிப்பது குதிரைக் கொம்

பாக இருக்கிற இந்தக் காலத்தில் ஏழே நாளில் கட்டிய இந்தச் சிக்கன வீடு ஏழைகளுக்கும் நடுத்தர மக்களுக்கும் ஆறுதல் அளித்து நம்பிக்கையூட்டக்கூடியதாக இருக்கும். 'ஏழு நாள் அதிசயம்' என்றே இந்த வீட்டுக்கு ஒரு பெயரைச் சூட்டிவிடலாம் போலிருக்கிறது.

## சித்தூர் நாகையா மறைந்தார்

தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலிய பன் மொழிகளிலும் வெளிவந்த சுமார் இருநூற்றைம்பது படங்களில் நடித்துப் பெரும் புகழ் பெற்ற நடிகர் சித்தூர் வி. நாகையா ஒரு பட்டதாரி. பாரத அரசின் பத்மஸ்ரீ விருது பெற்றவர். ஆரம்பத்தில்சாதாரணக் குமாஸ்தாவாக் வாழ்க்கையைத் தொடங்கிய நாகையாவுக்கு நாடகக் கலையில் மிகவும் ஈடுபாடு இருந்தது. அதன் காரணமாகச் சித்தூரில் ஸ்ரீ ராம விலாச நாடகசபை என்ற பெயரில் ஒரு நாடகக் குழுவை இயக்கி அதில் முக்கிய பாகங்களில் தாமே நடித்து வந்தார். அவர் நடித்து வெளிவந்த தெலுங்குப் படங்களில் ''கிருஹலக்ஷ்மி'' வெற்றிக் கொடி நாட்டியது. தமிழில் ''வந்தே மாதரம்'' அவருக்குப் புகழ் தேடித் தந்தது. ''ஏழை படும்பாடு'', ''எதிர்பாராதது'', ''கணவனே கண் கண்ட தெய்வம்'', ''தாயுள்ளம்'' முதலிய படங்கள் ரசிகப் பெருமக்களிடையே அவருக்குப் பேராதரவைத் தேடித் தந்தன. ஸ்ரீமதி எம். எஸ். நடித்த ''பக்த மீரா''வில் கும்பராணாவாக நடித்த நாகையா கம்பீரமான அப்பாத்திரத்துக்குக் கௌரவத்தை அளித்தார். ''பக்த போதனா'', ''தியாகையா'', ''சக்கரதாரி!'' முதலிய படங்களில் பக்தி மிகுந்த பாத்திரங்களை ஏற்று நடித்துக் குணச்சித்திர நடிகர் என்ற சிறப்புப் பெயரையும் பெற்றார். தயாரிப்பாளராகவும் மாறி ''என் வீடு'' என்ற கல் மனத்தையும் கரைய வைக்கும் சிறந்த படத்தைத் தயாரித்து அதில் தாமே கதாநாயகனாகவும் நடித்து மேலும் தம் புகழை வளர்த்துக் கொண்டார்.



நாகையா தேசபக்தி மிகுந்தவர்; தேச விடுதலைப் போராட்டத்தில் தீவிரப் பங்கு பெற்றவர். தம் வருவாயில் பெரும் பகுதியை அதற்காகவே வாரி வழங்கியவர்; கடைசி வரையில் கதராடையே புனைந்தவர்; பொதுப் பணியிலும் பேரார்வம் கொண்ட நாகையா, தியாகராயநகரில், வாணி மகால் கலையரங்கு உருவாவதற்குப் பெரும் அளவில் பொறுப்பேற்றவர்.

ஸ்ரீ ராமபிரானிடம் மாறாத நேயம் பூண்டவரும், நட்புக்குகந்த நல்ல மனிதரும், சிறந்த நடிகருமான நாகையா தமது எழுபதாவது வயதில் மறைந்துவிட்டார். நாகையாவுக்குச் சந்ததி இல்லையெனினும், அவரது நடிப்பாற்றலை நினைந்து உருகும் எத்தனையோ ரசிகர்கள் இருக்கிறார்கள்.

தமிழ்நாடு
திட்டத்தில்
வெட்டு

டி.பி.
தார்

குட்டுப் பட்டது
என்னவோ
உண்மைதான்!
ஆனால் முழுசா
மருந்து போட
நேன்னு
சொல்லியிருக்
காரு!



மணமும், சுவையும் சொல்கிறதே!



# இது நரசுஸ் காபி என்று!

நினைவிருக்கட்டும்!

"தெர்மலோ" முறையில் தயாரிக்கப்படும்

ஒரே காபி - **நரசுஸ் காபி!**



நரசுஸ் காபி கம்பேனி

சேலம்-7

கிளைகள்: பாண்டிச்சேரி, தமிழகமெங்கும்.

# காமாக்ஷியின் பெருமை (4)

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

அவளுடைய பெருமை நம் புத்திக்கும் வாக்குக்கும் எட்டாதது. சிவத்தையே சலனம் செய்விக்கிற சக்தி அது. அவளுடைய க்ஷண நேரப் புருவஅசைப்பை ஆக்ஞையாகக் கொண்டு பிரம்மாவும், விஷ்ணுவும், ருத்திரனும், ஈசுவரனும், ஸதாசிவனும் பஞ்சகிருத்தியங்களைச் செய்கிறார்கள் என்கிறது ஸௌந்தர்ய லஹரி (ஜகத்ஸூதே தாதா.) "உன் பாதத்தில் அர்ச்சித்து விட்டால் போதும், அதுவே மும்மூர்த்திகளின் சிரஸிலும் அர்ச்சனை செய்ததாகும். ஏனென்றால் திரிமூர்த்திகளின் சிரங்களும் எப்போதும் உன் பாதத்திலேயே வணங்கிக் கிடக்கின்றன" என்கிறது இன்னொரு சுலோகம். மும்மூர்த்திகளும் அந்தச் சரணார விந்தங்களில் தங்கள் தலையை வைத்து, தலை மீது கைகளை மொட்டுக்கள் மாதிரி குவித்து அஞ்சலி செய்கிறார்கள். நாம் புஷ்பம் போடுவது அம்பாளின் பாத மலர்களின் மீது மட்டுமல்லாமல் இந்தக் கரங்களான மொட்டுக்களுக்கும் அர்ச்சனை ஆகிறது. சகல தேவதைகளையும் பிறப்பித்த பராசக்திக்குச் செய்கிற ஆராதனை எல்லாத் தெய்வங்களுக்கும் செய்ததாகிறது.

அம்பாளின் சக்தியை ஸௌந்தரிய லஹரியில் ஆசாரியாள் சொல்கிறார்: "அம்மா! ஒன்பது சுற்றுப் பிராகாரங்களை உடைய வாஸஸ்தானத்தில் உள்ளுக்குள்ளே அந்தப்புரத்தில் பரப்பிரம்ம ஸ்வரூபமான பரமேசுவரனுடன் நீ சேர்ந்திருக்கிறாய். அந்த அந்தப்புரத்துக்கு நெருங்கி வரவே எவருக்கும் யோக்கியதை இல்லை. வெளியிலே ஒன்பது சுற்றுக்களையும் தாண்டியிருக்கிற வாசலில் தான் மகா பெரிய இந்திராதி தேவர்களும் வந்து காத்துக் கிடக்கிறார்கள். அந்த வெளி வாசலில் காவல் செய்கிற அணிமா முதலிய ஸித்திகளே இந்த இந்திராதி தேவர்களுக்கு அஷ்ட மகா ஸித்திகளைக் கொடுத்து விடுகிறார்கள்" என்கிறார்.

இந்த ஒன்பது கட்டு அரண்மனைதான் ஸ்ரீசக்கரம் என்கிற அம்பாள் யந்திரம். ரூபமேயில்லாத பராசக்தி திவ்விய மங்கள ஸ்வரூபத்துடன் அவயவங்களோடு காமேசுவரியாக வந்த மாதிரி, இந்த யந்திர ரூபத்திலும் இருக்கிறாள். பார்த்தால் ஏதோ கோடுகளும், கோணங்களுமாகத் தெரியும். ஆனால் இது அம்பாள் உருவமே. ஸ்ரீ சக்கரத்தில் ஆவரணங்கள் என்கிற ஒன்பது சுற்றுக்கள் இருக்கின்றன. அவற்றில் நடு மையத்தில் உள்ள பிந்து என்கிற புள்ளி சாட்சாத் பராசக்தி. மற்ற ஆவரணங்கள் இதைச் சுற்றிச் சுற்றி உள்ள கோட்டைகள் மாதிரி. பிந்து என்கிற அந்தப்புரத்தில் பரப்பிரம்மமாகிற காமேசுவரியாக இருக்கிறாள் பராசக்தியான காமாக்ஷி. அதுவே பூரண சக்தி. வெளியில் ஒன்பது ஆவரணங்களிலும் சுற்றிச் சுற்றிப் பல்வேறு தேவதைகள் இருக்கிறார்கள். இவர்களெல்லாம் பராசக்தியின் அம்சங்கள். இவர்களுக்கும் ஒவ்வொருவித சக்தி உண்டு. எல்லாவற்றுக்கும் வெளியே உள்ள ஆவரணத்தில் அணிமா முதலிய எட்டு தேவதைகள் காவல் இருக்கிறார்கள்.

ஸித்தர்கள் என்று சிலரைச் சொல்கிறோம். அவர்கள் இயற்கைக்கு அதீதமான அற்புதங்களைச் செய்கிறார்கள். இப்படி அற்புதம் செய்கிற ஸித்திகளை அணிமாதி எட்டுத் தேவதைகள் அநுக்கிரகம் செய்கிறார்கள். தன் சரீரத்தை அணு மாதிரி சின்னதாக்கிக்கொள்கிற ஸித்தி 'அணிமா'; எத்தனை பெரிய ரூபமும் எடுப்பது 'மஹிமா ஸித்தி'; பஞ்சை விட இலேசாகிப் பறப்பதற்கு 'லகிமா' என்று பேர்; இப்படிப்பட்ட பிரமிப்பூட்டுகிற ஸித்திகளைத் தருகிற தேவதைகள் கூட சாக்ஷாத் பராசக்தியின் அந்தப்புரத்துக்கு வெகு தூரத்துக்கு வெளியே நிற்கிற காவலாளிகள்தாம்.

இப்படிப்பட்ட அம்பாளின் சக்தி சில சமயங்களில், சில இடங்களில் ஜனங்கள் தாங்க முடியாதபடி வெளிப்படுகிறது. ஆதியில் திருவானைக்காவலில் அகிலாண்டேசுவரியின் சக்தி ரொம்பவும் உக்கிரமாக இருந்தது. அப்போது சாக்ஷாத் பரமேசுவர அவதாரமான ஆசாரியாள் ஸ்ரீசக்கரமாகவும் சிவசக்கரமாகவும் இரண்டு தாடங்கங்களைச் செய்து அவற்றிலேயே அம்பாளின் அதிகமான சக்தியைக் கிரகித்து அவற்றை அம்பாளுக்கே அணிவித்தார். காஞ்சிபுரத்தில் ஸ்ரீ ராஜ ராஜேசுவரியான காமாக்ஷியின் சக்தி உக்கிரமாக இருந்தபோது ஸ்ரீ ஆசாரியாள் அதை அவளுக்கு எதிரிலேயே ஒரு ஸ்ரீசக்கரம் ஸ்தாபித்து அதில் அடக்கினார். அன்றிலிருந்து அம்பிகையும் மகா ஸௌம்ய மூர்த்தியாகிவிட்டாள். எல்லோருக்கும் கருணை கடாட்சம் செய்து வருகிறாள்.

சக்தி பீடங்களில் தலைசிறந்த ஸ்ரீ காஞ்சி காமாக்ஷியின் ஆலயத் திருப்பணி நடைபெற்று வருகிறது. நமக்குச் சகல நலன்களையும் அளிக்கும் அன்னையின் பணிக்குப் பொருள் அர்ப்பணிக்கப் பாக்கியம் செய்திருக்க வேண்டும். செயலர், திருப்பணிக் கமிட்டி, ஸ்ரீ காமாக்ஷி அம்பாள் தேவஸ்தானம், காஞ்சிபுரம், 631502 என்ற முகவரிக்கு இன்றே திரவியம் அனுப்பி வைக்கவும்.

''ஓய்! ராமையா! இது மாதிரி சக்கைப் பிரதமன் நான் என் ஆயுசிலே சாப்பிட்ட இல்லே. என்ன வாசனை! என்ன ருசி! பிரமாதம் போம்!''

''இந்தக் குப்பண்ணு இருக்காரே, அவருக்குத் தித்திப்பு தவிர வேறே ஒண்ணும் பிடிக்காது. அதனால்தான் இன்னிக்குக் கத்திரிக்காய் பிட்லேயைப் பத்தி ஒண்ணும் சொல்ல மாட்டேங்கிறார். ஆகா! பிட்லேன்னா அது இதுதான்! நம்மாத்திலேயும் பெண்டுகள் பண்ணுறாளே களிமண் மாதிரி!''

''இன்னிக்குச் சாயந்திரம் டிபனுக்கு மைசூர் போண்டா போட்டிருந்தார் பாரு.... அடா—டா...டா. நம்ம ஜயராமய்யர் கை வாசனையே தனிதான்!''

''சாதாரணமா சமைச்சவாளுக்கு அதே சமையலைச் சாப்பிடப் பிடிக்காதுன்னு சொல்லுவா. ஆனால் அவர் சமையல் அவ்வளவு நன்னாயிருக்கிறதாலேதான் சமையல் முடிந்த கையோட முதலிலே இலையைப் போட்டுண்டு அவர் சாப்பிடறார்.''

''போன வாரம்தான் அவர் பிள்ளைக்குக் கல்யாணம் தடபுடலா நடந்தது. பெண்கூட ரொம்பப் பெரிய இடமாம்.''

''ஆமாம். ராவ்பகதூர் நாராயணசாமியின் பேத்தி; அட்வகேட் ராமலிங்கத்தோட ஒரே பெண்.''

''ஆனாலும் ஜயராமய்யருக்குப் பணத்தாசை ஜாஸ்திதான். இருக்கிறது போதாதோ?''

''சே, சே! அப்படியெல்லாம் பேசாதேடா ஜம்பு. அடுப்படிலே நாள் முழுதும் கிடந்து வேலை பார்க்கிறாரே தவிர அதுக்காக ஒரு தம்பிடி கூடப் பணம் வாங்கறதில்லே, தெரியுமோன்னேன்? தமக்கு உதவியா வர ஆட்களுக்குத்தான் நம்மைப் பணம் கொடுக்கச் சொல்றார்.''



# வாழ்வே தவமாக...

''அவர் முதலிலே சாப்பிடறது மட்டும் இல்லேன்னேன். அவர் சாப்பிடறதுக்கு முன்னாலே ஒரு குழந்தைக்குச் சாதம் போட்டாக் கூட அவருக்குக் கோபம் வந்துடறது—அது தான் வேடிக்கையாயிருக்கு!''

''இந்த ஜயராம் அய்யருக்கு டவுனிலே ஒரு பெரிய எவர்சில்வர் பாத்திரக் கடையே சொந்தம். நாலு ஆள் போட்டு நடத்தறார்! ஊரிலே நிலபுலன் எல்லாம் இருக்கு. அப்படி இருந்தும் சமையல் வேலைக்கு வரரே. அது மட்டும் வேடிக்கையாயில்லையா?''

''அப்படியா? எல்லாருக்கும் மூணு சீட்டு ஆடறது, குதிரை வால்லே பணம் கட்டறது—இப்படியெல்லாம் 'ஹாபி' இருக்கிற மாதிரி—இவருக்குச் சமையல் ஹாபியோ என்னவோ! 'எக்ஸென்ட்ரிக்' அப்படீன்னு சொல்வாளே அந்த ரகத்தில் சேர்ந்தவர் போல இருக்கு. சரியான அசடு. அடுப்படிக்கு யாராவது ஆசைப்படுவாளோ!''

''எப்படி இருந்தா என்ன? கல்யாணங்களிலே நமக்கு நல்ல சாப்பாடு கிடைக்கிறது.''

இப்படிச் சாப்பாட்டையும், சமையல் செய்தவரையும் விமர்சித்துக் கொண்டு, நிதானமாகச் சாப்பாட்டை ரஸித்து உண்டு களித்துக் கொண்டிருந்தது விருந்தினர் கூட்டம். தமது வேலைகளை முடித்துவிட்டுச் சாப்பிட்டபின் மேல் துண்டை விரித்து முதுகில் போர்த்திக் கொண்டு குன்று எழுந்து நகருவதைப் போல் பந்தலுக்கு வெளியில் வந்து கொண்டிருந்தது ஜயராமய்யரின் கனத்த கரிய உருவம்.

தம் கைத் திறனைப் புகழும் அந்த விருந்தினர்கள் தம்மை இகழ்ந்து கேலி செய்வதும் அவர் காதுகளில் விழத்தான் செய்தது. இன்று நேற்றல்ல, கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக அவர் செவிகள் கேட்டுப் பழகியிருந்த சொற்கள்தாம் அவை.

முன்பெல்லாம் இத்தகைய கேலிக்கூத்துக்கு அஞ்சிய ஜயராம அய்யர், ஐந்தாறு ஆண்டுகளுக்கு மேல் ஒரு நகரத்தில் நிலைக்காமல் மதுரை, திருச்சி என்று தமது குடியிருப்பை மாற்றிக் கொண்டிருந்தார். பொருள் வசதி பெற்ற எவரும் உடல் வருந்த உழைப்பது கேவலம் என்று கருதும் மக்கள் மத்தியில் ஜயராமய்யரது உழைப்பு கேலிக்கிடமாக அமைந்ததில் வியப்பில்லை!

ஐம்பதை நெருங்கிவிட்ட வயதில், ஊர் பேசும் பேச்சுக்கள் அவருக்குப் பழகிச் சலித்துவிடச் சென்னையில் நிரந்தரமாக வசிக்கத் தொடங்கியிருந்தார்.

**டா**க்ஸியை விட்டிறங்கி வீட்டினுள் நுழைந்தார் ஜயராம அய்யர். நடுக் கூடத்தில் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த அவர் மனைவி அவரைக் கண்டதும், ''இன்னிக்கு உங்க பிறந்த நாள் ஞாபகம் இருக்கோ இல்லையோ? காலமே கோயில்லே அர்ச்சனை பண்ணிப் பிரசாதம் வந்திருக்கு'' என்று கூறியபடி எழுந்து அருகில் இருந்த அலமாரியிலிருந்து விபூதி குங்குமம் அடங்கிய பிரசாதத் தட்டைக் கொடுத்தாள்.

'' நன்னா ஞாபகம் இருக்கு '' என்று சொல்லிக் கொண்டே ஊஞ்சலில் அமர்ந்த ஜயராமய்யர் திருநீற்றை நெற்றியில் அணிந்து கொண்டார். ''இன்னிக்குக்கூட அங்கே தான் சாப்பிடணுமா ? பாயசமும் பச்சடியுமாய் நாலு நிறுசு பண்ணியிருக்கேன் '' என்றாள் அவர் மனைவி.






''இராத்திரியாவது ஆத்துக்குச் சாப்பிட வந்துடணும்னுதான் நினைச்சேன், கமலம். ஆனால் இராத்திரியும் நான்தான் சமையல் செய்யணும்னு சர்மா ரொம்ப சொன்னார். தட்ட முடியலே. சமைச்சா நான் சாப்பிடாமல் வரமாட்டேன்னு உனக்குத் தெரியுமே!''

சாப்பிட்டுக் கை கழுவிவிட்டு மனைவி பின்தொடர ஹாலில் நுழைந்தான் ஐயராமய்யரது புதல்வன் பாபு. சுருண்டு அடர்ந்த தலைமுடி — தாயைப் போல் பளிரெனத் துலங்கும் சிவந்த மேனி. எடுப்பான மூக்கும்அகன்றநெற்றியும் அவன் அழகன் என்று பறைசாற்றின.

அவனைக் கண்டதும், ''குழந்தை பாபுகூட இப்ப கொஞ்சம் முன்னாடி சொல்லிண்டு இருந்தான். அப்பா ஏன் இப்படிச் சமையல் வேலை செய்யணும்னு மாட்டுப் பெண் ராதா கேட்டாளாம்'' என்றாள் கமலம்.

'அப்படியா?' என்பது போல் எதிரிலிருந்த மகனை ஏறிட்டுப் பார்த்தார் ஐயராமன். அந்தப் பார்வையின் தீட்சண்யத்தைத் தாங்க முடியாமல் வேறு புறம் முகத்தைத் திருப்பிக் கொண்டான் பாபு. தந்தை எதிரில் நின்று பேச அவனுக்கு என்றுமே துணிவு இருந்ததில்லை. மிகவும் கண்டிப்பு நிறைந்த தந்தைக்கும், தாயின் செல்லப்பிள்ளையான பாபுவுக்கும் மனத்தளவில் ஏற்பட்டிருந்த இடைவெளி அவர்களுக்கே புரியாத புதிராக இருந்தது.

தம் மகன், தமது பொறுப்புக்களைத் தானே சமாளித்துப் பழகிக் கொள்ள வேண்டும் என்பதற்காக அவன் வேலையில் சேர்ந்த மறு மாதமே தனியாக ஓர் அறைக்குக் குடிபோகச் செய்தார், மனைவியின் கடும் எதிர்ப்பையும் மீறி. ஒரே ஊரில் பெற்றோர் ஒரு பக்கமும் பிள்ளை ஒரு பக்கமும் வசிக்க ஆரம்பித்தனர். இரண்டு வருடங்கள் தனித்து வாழ்ந்து பழகிய மகன் தான். அட்வகேட் ராமலிங்கத்தின் மகள் ராதையைக் காதலிப்பதை—தாய் மூலம் தந்தைக்கு அறிவித்தபொழுது தமது மனப்பூர்வமான ஆசிகளுடன் மகனின் மனம்போல் அவனுக்கு மணம் முடித்து வைத்தார் ஐயராமய்யர்.

''கமலம்! நீயும் இருபத்தைஞ்சு வருஷமா 'நீங்க ஏன் சமையல் வேலை செய்யறேள்'னு கேட்டு அலுத்துப் போயிட்டே. இப்ப உன் மாட்டுப் பெண் அந்தக் கேள்வியைக் கேட்க ஆரம்பிச்சிருக்கா. இனிமேலும் நான் பதில் சொல்லாமல் இருக்கிறது சரியில்லே. பாபு! ராதா! இரண்டு பேரும் வந்து இப்படி உட்காருங்கோ. கமலம்! நீயும்தான். நின்னது போதும் உட்காரு'' என்று கூறி விட்டுச் சற்று நிறுத்தினார். அவரது மனம் பழைய நினைவுகளில் படர்ந்தது. சற்று நேரம் ஆழ்ந்த மௌனத்துக்குப் பிறகு அவர் தொடர்ந்தார்:

''அந்த நாளிலே பாலக்காட்டில் ஹோட்டல் நடத்தி நிறையச் சம்பாதித்தவர் எங்க அப்பா. நன்னாத்தான் நடத்திண்டு இருந்தார். ஊரிலே பிரும்மோற்சவம் ஆரம்பித்தது. வெளியூர்க் கூட்டம் ஹோட்டல்லே நிரம்பி வழிஞ்சிண்டு இருந்தது. அப்ப ஒரு நாள் சமாளிக்க முடியாதபடி கூட்டம் வந்துடுத்து. வந்த வாடிக்கைக்காரர்களுக்கு இல்லேன்னு சொல்லி வியாபாரத்தைக் குறைச்சுக்க அப்பாவுக்கு இஷ்டம் இல்லே. நல்லது கெட்டது எல்லாப் பண்டங்களையும் சேர்த்து — வந்தவர்கள் எல்லோருக்கும் சாப்பாடு போட்டார். அன்னிக்கு அங்கே சாப்பிட்டவாள்லே இருபத்தஞ்சு பேர் வாந்தி வாந்தியா எடுத்து உயிரை விட்டுட்டா. சுகாதார அதிகாரி அவா இவாளெல்லாம் எங்கப்பாவோட பணத்துக்கு முன்னாலே ஊமையாகி விட்டார்கள். வழக்கோ வாதமோ இல்லாம அந்தச் சம்பவத்தை உலகமும் மறந்துவிட்டது. ஆனால் என் மனசு பதறித்து. அன்னிக்கு அப்பாவை எதிர்த்துப் பேசத் துணிவில்லே. என் மனசில் ஒரு சங்கல்பம் பண்ணிண்டேன். என்னோட ஐம்பதாவது வயசு வரை என்னாலே எத்தனை சுப காரியங்களுக்கு உடலை வருத்தி உழைக்க முடியுமோ அத்தனை நாட்கள் ஊதியம் வாங்காமல் சமைக்கணும்; சாப்பாட்டில் விஷப் பொருள் இல்லையான்னு நானே சாப்பிட்டுப் பார்த்துத் தெரிந்த பிறகுதான் பிறருக்குப் போடணும். இதுதான் என் சங்கல்பம்.

'' இந்தச் சங்கல்பத்தை வெளியில் சொன்னா யாரேனும் என் மனசை மாத்திடுவாளோன்னு பயம், மனசுக்குள்ளேயே வைச்சிண்டு இருந்தேன். இன்னிக்கு எனக்கு ஐம்பது வயசாச்சு. ஏதோ இன்னி வரை என் உடம்பும் என் சங்கல்பத்துக்குத் துணையா நின்னுடுத்து. மனசிலேயும் அப்பா பண்ணின தப்புக்கு சிறிதளவாவது பிராயச்சித்தம் பண்ணின திருப்தி.'' உணர்ச்சி பெருகத் தொடர்ந்து பேசியதால் அவருக்கு மூச்சு வாங்கியது.

கணவரின் மன எழுச்சியைப் புரிந்து கொண்டு அவரது நல்லெண்ணத்தைக் கண்டு தனக்குள் வியந்தாள் கமலம். தந்தையின் வாக்குறுதியைக் காக்கக் காடு சென்ற ஸ்ரீராமரை விடவும், தந்தையின் பாபச் செயலுக்குப் பரிகாரமாகத் தம் உடலை வருத்திக் கொண்டிருக்கும் ஐயராமன் அவள் மதிப்பில் உயர்ந்து நின்றார்.

''ஊர்க்காரா உங்களைக் கேலி செய்யறா. உங்க தங்கமான மனசு யாருக்குப் புரியறது? ஏன், எனக்கே இத்தனை நாட்களாய்ப் புரியவில்லையே!'' கலங்கிவிட்ட கண்களைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள் கமலம். பிரமிப்பால் மலைத்துவிட்டிருந்தனர் பாபுவும், ராதாவும்.

'' அது போகட்டும், கமலம். இனிமேல் நான் பட்டணத்திலே இருக்க ஆசைப்படலே. நேத்திக்கே இந்த வீட்டையும் பாத்திரக் கடையையும் பாபுவின் பேருக்கு மாத்திட்டேன். கிராமத்தில் இருக்கிறது நம்ம காலட்சேபத்துக்குப் போதும். நிம்மதியா கிராமத்துக்குப் போய்ப் பகவத் சேவையில் ஈடுபடணும்னு தோணறது......''

'' உங்க இஷ்டம் எதுவோ அதன்படி செய்துட்டாப் போச்சு.''

சென்ட்ரல் ஸ்டேஷனில் பிளாட்பாரத்தில் நின்ற ரயிலில் மூன்றாம் வகுப்புப் பெட்டியில் உட்கார்ந்திருந்தனர் ஐயராமய்யரும் அவரது மனைவியும். பளிச்செனச் சந்தனக் கீற்றுடன் விளங்கிய அந்தப் பரந்த முகம் அசாதாரண அமைதியுடன் விளங்கியது.

# Hosiery made of pure GRASIM STAPLE FIBRE

has a better appearance, fuller feel, equal stretch, excellent durability, and high dimensional stability

If you are in the manufacturing line, Grasim Staple Fibre could lead you to bigger Sales, bigger Profits. A slight modification in your knitting methods such as increasing the courses per inch will help you to manufacture firm and compact knitted garments from 100% Staple Fibre.




**THE GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD.**
Birlagram, Nagda (M.P.)

# மைக்ரோஃபைன்ட்
# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது—

சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோஃபைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • ஃப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள், தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

நிகோலஸ் Ⓝ தயாரிப்பு

A.G.57 TM

சற்றுத் தள்ளி, பெஞ்சின் மறு ஓரத்தில் சோர்வுடன் அமர்ந்திருந்த ஓர் இளம் பெண்ணின் மேல் அவர் பார்வை சென்றது. உறங்கும் சிறு குழந்தையை இடது தோளில் சாய்த்துக் கொண்டு வலக் கரத்தால் ஒரு துணிப் பையைத் தாங்கிக் கொண்டிருந்த அந்தப் பெண்ணின் கண்களில் ஏன் இந்த எல்லை கடந்த துயரத்தின் நிழல் !

பெண் குழந்தைகள் இல்லாத ஜயராமய்யரது மனைவிக்கு இளம் பெண்களிடம் இயல்பானதோர் அன்பு உண்டு. ''குழந்தைக்கு ஒரு வயசு ஆயிடுத்தாம்மா ?'' ஆதரவாக விசாரித்தாள் கமலம் அப்பெண்ணிடம்.

'' இன்னும் ஒரு வருஷம் ஆகலேயம்மா. ஒன்பது மாதம் ஆகிறது.'' இனிமையான அந்தக் குரலில் கன்னட உச்சரிப்பும் சேர்ந்து தமிழ் மழலையாக ஒலித்தது. அதைத் தொடர்ந்து பரஸ்பரக் கேள்வி பதிலில் சம்பாஷணை நீண்டது. தன்னைப் பற்றிய விவரங்களைத் தயக்கமின்றி — ஆனால் மனத்தைக் கவ்வும் சோகம் படிந்த குரலில் கூறினாள் அந்தப் பெண்.

பருவத் துடிப்பில் — அழகிய இளைஞனின் மோகத்தில் தன்னை இழந்து — தாயாகி, அவனாலும் கைவிட்டபின் வாழ்வில் அவதியுறும் எத்தனையோ பெண்களின் அவல சரித்திரம் போன்றதுதான் அவளுடையதும். இதிகாச காலம் தொட்டு இத்தகைய கதைகள் காவியங்களாகச் சமூகத்தில் உலவியும் படிப்பினை பெறாத நவயுகப் பெண்களில் அவளும் ஒருத்தி.

''இந்தக் குழந்தையின் தகப்பனைத் தேட நீ முயற்சி செய்யவே இல்லையாம்மா !''—கேட்டார் ஜயராம அய்யர்.

''அவர் பெயரைத் தவிர வேறு எந்த விவரத்தையும் அவர் என்னிடம் கூறவில்லையே. 'ஆபீஸ் விஷயமாக பம்பாய் போகிறேன். ஒரு மாதத்தில் திரும்பி வருவேன். வந்தவுடன், உண்மையை என் பெற்றோரிடம் கூறி உன்னை என்னுடன் அழைத்துச் செல்கிறேன்' என்று கூறிப் போனவர்தான். ஒன்னரை வருஷமாகிவிட்டது. இன்னும் ஒரு தகவலும் இல்லை. தாய் தந்தையற்ற எனக்குத் துணையாக இருந்த என் வயோதிக அத்தையும் போனமாதம் காலமாகிவிட்டார்கள். கோயமுத்தூரில் நல்ல நிலையில் இருக்கும் என் சிநேகிதி, என் நிலையறிந்து வருந்தி என்னை அங்கு வரச் சொல்லி யிருக்கிறாள். அவள் உதவியுடன் எங்காவது வேலை பார்க்கலாம் என்ற எண்ணம்.

ரயில் கிளம்பியது. தூங்கிக் கொண்டிருந்த குழந்தை திடுக்கிட்டு விழித்துக் கொண்டு அழத் தொடங்கியது.

''வேண்டாம்பா....அழாதே....கண்ணு... எங்கிட்ட வா !'' சிறிது நேரம் பழகிவிட்ட உரிமையில் குழந்தையைத் தாயிடமிருந்து வாங்கிக் கொண்டாள் கமலம். தனது கூடையிலிருந்து ஒரு வாழைப் பழத்தைப் பிய்த்துக் குழந்தையின் கையில் கொடுத்தாள். தூக்கம் தெளிந்த குழந்தை அழகாகச் சிரித்தது. குழந்தையின் முகத்தை நோக்கினார் ஜயராமய்யர். சுருண்ட அழகிய தலைமயிர்.

## மாம்பலம் ஸ்ரீ கருமாரி

சென்னை மேல மாம்பலம் சாமியார் தோட்டத்தில் ஸ்ரீ தேவி கருமாரியம்மனுக்கு ஓர் ஆலயத் திருப்பணி ஆரம்பித்து இப்போது முடிவடையும் கட்டத்தில் இருக்கிறது. அம்பாள் சந்நிதியோடு, ஸ்ரீ மஹா கணபதி, ஸ்ரீ முத்துக் குமாரஸ்வாமி, ஸ்ரீ ஸ்ரீநிவாஸப் பெருமாள் சந்நிதிகளும் கட்டப்பட்டிருக்கின்றன. வருகிற தை மாதத்திலேயே அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் நடத்தத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. இப்பணி நிறைவுற இன்னும் ரூபாய் இருபதாயிரம் தேவைப்படுகிறது. அன்பர்கள் யாவரும் தங்களால் இயன்ற பொருள் உதவி செய்யக் கோருகிறோம். ''ஸ்ரீ மஹாத்ரிபுர ஸுந்தரீ நிகேதனம்'', 37-பி, மூர்த்தி தெரு, மேல மாம்பலம், சென்னை-33 என்ற முகவரிக்குப் பொருள் அனுப்பவும்.

ரோஜாப் பூவாய்ச் சிவந்த நிறம். அந்தக் கண்கள்... கருமையற்ற வெளிறிய பூனைக் கண்கள்......

''ஏன்னா ! நம்ப பாபு ஒரு வயசில் இப்படியேதான் இருப்பான். உங்களுக்கு ஞாபகம் இருக்கோ?'' என்று கூறிவிட்டுக் குழந்தையைக் கொஞ்ச ஆரம்பித்தாள். ஜயராமய்யர் மனம் ஏனோ தடுமாறியது.

''இவன் அப்பா பேருகூட பாபுதானம்மா.'' இந்த நிலையிலும் வெட்கத்தால் முகம் கனியக் கூறினாள் அந்தப் பெண்.

''அம்மா, குழந்தே.... அந்தப் பையனைப் பற்றி வேறு ஒரு விவரமும் உனக்குத் தெரியாதா ?'' சற்றுப் பதற்றத்துடன் கேட்டார் ஜயராமய்யர்.

மறுபடியும் கேள்வி கேட்கும் பெரியவரைப் பார்த்தாள் அந்தப் பெண். சட்டென்று ஏதோ நினைவுக்கு வந்தவளாக — தனது பையிலிருந்து ஒரு பர்ஸை எடுத்தாள். அதனுள் இருந்த ஒரு புகைப்படத்தை எடுத்து அவரிடம் கொடுத்துவிட்டு, ''அவரும் நானும் சேர்ந்து எடுத்துக் கொண்ட போட்டோ இது. இது தவிர அவரைப் பற்றிய எந்த விவரமும் என்னிடம் இல்லையே !'' என்றாள்.

புகைப்படத்தைக் கையில் வாங்கினார் ஜயராமய்யர். மனம் பரபரக்க அதில் பார்வையைச் செலுத்தினார். விழிகளில் தீப்பட்டாற்போல் அவர் கண்கள் துடித்தன. 'ஓ'வென்ற பேரிரைச்சல் அவர் செவிகளைச் செவிடாக்கியது. அவரது தலை சுழன்றது !

புகையும் வெம்மையும் சூழக் கோட்டை அடுப்பின் அருகில் அமர்ந்து சமையல் செய்து கொண்டிருக்கிறார் ஜயராம அய்யர். இன்று அவர் தொழில் அது — சமைப்பதற்கு ஊதியம் பெறுகிறார். ஆம், ஒவ்வொரு மாதமும் கோயமுத்தூரில் இருக்கும் அந்தப் பெண்ணுக்கு அனுப்பப் பணம் வேண்டுமே !

முந்திய தலைமுறைக்காகத் தம் வாழ்வின் ஒரு பகுதியைப் பிராயச்சித்தமாக்கிக் கொண்ட அவரது அந்திம வாழ்வு இளைய தலைமுறைக்காக நீண்ட தவமாகி நிற்கிறது!

# 'டெரீன்' சூட்டிங்குகளில், ஷர்ட்டிங்குகள் மற்றும் புடவைகளின் வியாபார வளர்ச்சிக்கு சான்று: எஸ்.குமார் என்னும் பெயர்.,



வியாபாரத்தில் கூட்டு என்றால் நட்புறவு; முன்னேற்றத்தில் கூட்டுறவு. கைஃபி, மதுரா மற்றும் லக்ஷ்மி விஷ்ணு போன்ற நிறுவனங்களின் அழகிய 'டெரீன்' சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள் மற்றும்புடவைகளின் வளர்ந்து வரும் வியாபாரம், அவற்றின் சிறப்புக்கு சான்று: வியாபார நண்பர்கள் மற்றும் உற்பத்தியாளர்களின் இணைப்புக்கு மறு பெயர் எஸ். குமார்.

நாடெங்குமுள்ள மொத்த மற்றும் சில்லறை வியாபாரிகளுடன் நாங்கள் கொண்டுள்ள பரவலான நெருங்கிய தொடர்புகளின் மூலம் கிடைத்துள்ள தகவல்கள், உங்கள் விருப்பத்தை அறிந்து கொள்ள உதவியிருக்கின்றன. இதனால் உங்கள் விருப்பமே எங்கள் விருப்பம்.

வாழ்க்கையின் வண்ணஜாலங்களில் ஊறிய உங்கள் விருப்பத்துக்கு ஏற்ற துணிகளின் அறிகுறி, அழகுதோய்ந்த ஓர் அனுபவம். அதன் மறு பெயர் தான்: எஸ். குமார்.

## எஸ்.குமார்



® ரஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்

'டெரீன்' சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்
மற்றும் புடவைகளுக்கு ஒரு நம்பகமான பெயர்.

எஸ். குமார், நிரஞ்சன், 99, மெரீன் ட்ரைவ், பம்பாய்-400 002

SISTA'S-SK-3025-TAM

# முதற் பாகக் கதை

இன்றைக்கு ஆயிரத்து முந்நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன்னால் கல்வியில் சிறந்த காஞ்சிமாநகரில் தர்ம மகாராஜாதி ராஜ மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி செங்கோல் செலுத்தி வந்தார். அவருடைய சாம்ராஜ்யம் தெற்கே பாண்டிய நாட்டு எல்லையிலிருந்து வடக்கே கோதாவரி நதிக்கரை வரையில் பரவியிருந்தது.

கீழைச் சோழ நாட்டிலுள்ள திருச்செங்காட்டாங்குடி கிராமத்திலிருந்து பரஞ்சோதி என்னும் இளைஞன் காஞ்சியில் திருநாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து தமிழ்க் கல்வி கற்பதற்காக வந்தான். வழியிலே சந்தித்த நாகநந்தி என்னும் புத்த சந்நியாசியுடன் அவன் ஒருநாள் இருட்டிய பின்னர் காஞ்சிக் கோட்டைக்குள் பிரவேசித்தான். அதே தினத்தில் சளுக்க மன்னனாகிய புலிகேசி பல்லவ சாம்ராஜ்யத்தின் மேல் படையெடுத்திருக்கும் செய்தி வந்ததன் காரணமாக ஆயனச்சிற்பியின் பெண் சிவகாமியின் நடன அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்டது.

தெறி கெட்டு ஓடிவந்த மதயானையின் மேல் வேலை எறிந்து ஆயனரையும் சிவகாமியையும் பரஞ்சோதி தப்புவித்துவிட்டு, தான் தப்புவதற்காக ஓடுகிறான். அவனை ஒற்றன் என்று சந்தேகித்துக் காவலர்கள் சிறையில் அடைக்கிறார்கள். அன்றிரவே நாகநந்தி அவனைச் சிறையிலிருந்து தப்புவித்து இரகசிய வழியின் மூலம் கோட்டைக்கு வெளியே அழைத்துச் செல்கிறார்.

திருநாவுக்கரசருக்கும் ஆயனருக்கும் பரஞ்சோதி ஓலை கொண்டு வந்திருந்தான். திருநாவுக்கரசர் காஞ்சியில் இல்லை என்று அறிந்து, அவன் புத்த பிக்ஷுவுடன் ஆயனர் வீடு செல்கிறான்.

ஆயிரம் வருஷங்கள் ஆனாலும் அழியாத அஜந்தா வர்ணச் சேர்க்கை ரகசியத்தை அறிந்து வருவதற்காகப் பரஞ்சோதியைக் கிருஷ்ணா நதிக் கரையிலுள்ள நாகார்ஜுன மலைக்கு ஆயனரும் நாகநந்தியும் அனுப்புகிறார்கள்.

மகேந்திர சக்கரவர்த்தி, சிவகாமியிடம் காதல் கொண்ட குமார சக்கரவர்த்தி நரசிம்மவர்மரைக் காஞ்சிக் கோட்டையை விட்டு வெளியில் போகக் கூடாதென்று திட்டம் செய்து விட்டு வடக்கே போர்க்களம் செல்கிறார்.

காஞ்சியில் திருநாவுக்கரசர் மடத்துக்கு ஒருநாள் ஆயனரும் சிவகாமியும் வருகிறார்கள். நாவுக்கரசரின் திருப்பாசுரங்களுக்குச் சிவகாமி அபிநயம் பிடித்து உணர்ச்சி மிகுதியினால் மூர்ச்சையடைகிறாள்.

அச்சமயம் அங்கிருந்த நரசிம்ம வர்மரின் நடவடிக்கைகளிலிருந்து அவர் சிவகாமியிடம் கொண்டிருந்த காதலை அவருடைய ரத சாரதி கண்ணபிரான் தெரிந்து கொள்கிறான். அதைப் பற்றி அவன் தன் மனைவி கமலியிடம் அன்றிரவு பேசிக் கொண்டிருந்ததைச் சிவகாமி ஒட்டுக் கேட்க நேர்கிறது.

ஓலையுடன் சென்ற பரஞ்சோதிக்கு வழியில் வஜ்ரபாகு பழக்கமாகிறான். இரவு தூங்கினபோது பரஞ்சோதியின் ஓலை மாற்றப்படுகிறது. மறுநாள் அவனைப் புலிகேசியின் ஆட்கள், வாதாபி சைன்யத்தின் பாசறைக்குப் பிடித்துச் செல்கிறார்கள். ஓலையின் கருத்து விளங்காமல் புலிகேசி பரஞ்சோதியைக் காவலுடன் ஸ்ரீபர்வதத்துக்கு அனுப்புகிறான்.

வழியில் வஜ்ரபாகு அவனைச் சளுக்க வீரர்களிடமிருந்து தப்புவித்துப் பல்லவ சைன்யத்தின் பாசறைக்குக் கொண்டுவந்து சேர்க்கிறான்.



### முதல் அத்தியாயம்

## வடக்கு வாசல்

**கா**ர் காலத்தில் ஒரு நாள் மாலை காஞ்சிமா நகரின் கோட்டை கொத்தளங்களுக்குப் பின்னால் சூரியன் இறங்க, வட கிழக்குத் திசையில் குமுறிக் கொண்டிருந்த மேகங்களின் தங்க விளிம்புகள் வர வர ஒளி குன்றி வந்தன. செங்கதிர்த் தேவன் தன் கடைசித் தங்கக் கிரணத்தையும் சுருக்கிக் கொண்டு மறையவே, வான - முகில்கள் நீல நிறத்தை அடைந்து, திருமாலின் மேனி வண்ணத்தை நினைவூட்டின.

வட கிழக்குத் திசையிலிருந்து விர்ரென்று அடித்துக் கொண்டிருந்த வாடைக் காற்றின் சிலுசிலுப்பினால் மரங்களும் கொடிகளும்கூட நடுங்குவதாகத் தோன்றியது.

காஞ்சிமா நகரத்துக் கோட்டை மதில்களிலும், கோயில் கோபுரங்களிலும், அரண்மனை விமானங்களிலும், கலை மண்டபங்களிலும் குடியேறி வாழ்ந்த பல வகைப் பறவைகள் சட சட வென்று இறக்கைகளை அடித்துக் கொண்டு தத்தம் வாசஸ்தலத்தை நோக்கிப் பறந்து கொண்டிருந்தன.

அந்த மனோரம்மியமான அந்திப் பொழுதில் காஞ்சிக் கோட்டையின் விசால



மான வடக்கு வாசல் அமைதி குடி கொண்டு விளங்கிற்று.

எட்டு மாதங்களுக்கு முன்னால் மகேந்திர சக்கரவர்த்தி அந்தக் கோட்டை வாசல் வழியாகப் போர்க் களத்துக்குப் பிரயாணமான பின்னர், அவ்வாசலின் பெருங் கதவுகள் திறக்கப் படவில்லை. உட்புறத்தில் கனமான எஃகுச் சட்டங்களினால் அவை தாழிடப் பட்டுப் பெரிய பூட்டுக்களினால் பூட்டப் பட்டிருந்தன.

வாசலின் வெளிப்புறத்தில் காவலர்கள் இருவர் கையில் வேலுடனும் இடையில் வாளுடனும் நின்று காவல் புரிந்தார்கள். ஒவ்வொருவருடைய கழுத்திலும் ஊதும் கொம்பு ஒன்று தொங்கியது. கோட்டை வாசலிலிருந்து புறப்பட்ட விசாலமான இராஜ பாட்டையானது அங்கிருந்து வெகு தூரம் வரையில் வளைந்தும் நெளிந்தும்



ஊர்ந்து செல்லும் பாம்பைப் போல் காணப்பட்டது.

அந்தப் பாதையில் கண்ணுக்கெட்டிய தூரத்துக்கு ஒருவரும் காணப்படவில்லை யாயினும், காவலர்கள் இருவரும் சாலையைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தால், யாரையோ அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது போல் தோன்றியது.

திடீரென்று வெகுதூரத்தில் புகைப் படலம் போன்ற புழுதி எழுந்தது. குதிரைகளின் பாய்ச்சல் சத்தம் கேட்டது. காவலர்கள் இருவரும் ஜாக்கிரதையாக நின்றார்கள்.

கோட்டை வாசலின் மேல் மாடத்தில் எச்சரிக்கை முரசு 'திண்' 'திண்' என்று சப்திக்கத் தொடங்கியது.

புழுதிப் படலமும், குதிரைகள் வரும் சத்தமும் அதிவிரைவில் நெருங்கி வந்து விட்டன. மங்கலான மாலை வெளிச்சத்தில் குதிரைகளும் கண்ணுக்குப் புலனாயின.

முன்னால் வந்த இரண்டு குதிரைகளின் மேலிருந்த வீரர்கள் கையில் ரிஷபக் கொடி பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு அடுத்தாற்போல் தனித்து வந்த உயர்ந்த சாதிக் குதிரையின் மீது போர்க் கோலம் பூண்ட கம்பீரத் தோற்றமுடைய ஒரு யௌவன புருஷன் வீற்றிருந்தான். இன்னும் சில குதிரைகள் கொஞ்சம் தள்ளிப் பின்னால் வந்தன.

கோட்டை வாசலுக்குச் சற்று அப்பால், அகழிப் பாலத்தின் அக்கரையில் எல்லாக் குதிரைகளும் நின்றன.

முன்னால் கொடி பிடித்து வந்த இருவரில் ஒருவன், "காஞ்சிமா நகர்க் கோட்டையின் வீர தளபதி பரஞ்சோதியார் வருகிறார்! கோட்டைக் கதவைத் திறவுங்கள்!" என்று கூவினான். இன்னொருவனும் அவ்வாறே திரும்பக் கூவினான்.

"தளபதி பரஞ்சோதி வாழ்க! வாழ்க!" என்று பற்பல குரல்கள் சேர்ந்து கோஷித்தன.

கோட்டைக் காவலர் இருவரும் விரைவாக நடந்து முன்னால் வந்தார்கள். தனித்து நின்ற உயர் ஜாதிக் குதிரை மீதிருந்த வீரனை அவர்கள் அணுகி வணக்கத்துடன் நின்றார்கள்.

ஆம்; அந்தக் கம்பீரமான கறுத்த குதிரையின் மீது வீற்றிருந்த வீரன் நம் பழைய நண்பனான பரஞ்சோதிதான்.

எட்டு மாத காலத்துக்குள்ளே அவனிடம் காணப்பட்ட மாறுதலானது மிக்க அதிசயமாயிருந்தது.

காஞ்சியில் பிரவேசிக்கும் போது அவன் உலகம் அறியாத பாலகனாயிருந்தான். அவனுடைய முகமானது பால் வடியும் குழந்தை முகமாயிருந்தது. இப்போதோ அந்த முகத்தில், எத்தனையோ போர்முனைகளில் முன்னணியில் நின்று போரிட்டதன் அடையாளங்களான பல காயங்களுடன், உலக அநுபவத்தினால் ஏற்படும் முதிர்ச்சியும் காணப்பட்டது. எனவே, நாமும் தளபதி பரஞ்சோதிக்குரிய கௌரவத்தை அளித்து அவரை மரியாதையுடன் குறிப்பிட வேண்டியவர்களாகிறோம்.

கோட்டைக் காவலர்கள் தளபதியை அணுகிப் பயபக்தியுடன் நின்ற போது, அவர் மிக்க பெருமிதத்துடனே கையில் ஆயத்தமாய் வைத்திருந்த சிங்க இலச்சினையை எடுத்துக் காட்டினார்.

அதைப் பார்த்த வீரர்கள் மறுபடியும் தளபதி பரஞ்சோதிக்கு வணக்கம்

செலுத்திவிட்டுத் திரும்பிச் சென்று, அகழியின் பாலத்தை நெருங்கியதும், தங்கள் தோளில் தொங்கிய கொம்பு களை எடுத்து, 'பூம்' 'பூம்' என்று ஊதி னார்கள்.

உடனே, கோட்டைக் கதவுக்குள் அமைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய துவாரக் கதவு திறந்தது. உள்ளிருந்து ஒரு முகம் எட்டிப் பார்த்தது. வாயிற் காவலர்களை அந்த முகத்துக்குடைய வன் ஏதோ கேட்க, அவர்கள் மறு மொழி சொன்னார்கள்.

அடுத்தகணம் உட்புறத்தில் இரும்புத் தாள்களும் பூட்டுக்களும் திறக்கப்படும் சத்தம் கேட்டது. பின்னர், அந்தப் பிரம்மாண்டமான கோட்டைக் கதவுகள், கடகடவென்றும், மடமட வென்றும் சத்தம் செய்து கொண்டு திறந்து, வந்தவர்களுக்கு வழிவிட்டன.

கொடி பிடித்த இரு வீரர்களையும் பின்னால் விட்டுவிட்டு, தளபதி பரஞ் சோதி அகழியின் பாலத்தைக் கடந்து கோட்டை வாசலுக்குள் முன்னதாகப் பிரவேசித்தார்.

முன் கோட்டை வாசலுக்கு ஏறக் குறைய இருநூறு அடி தூரத்துக்கப் பால், இரண்டாவது சிறு வாசல் ஒன்று காணப்பட்டது.

இரண்டு வாசல்களுக்கும் நடுவில் கீழே கருங்கல் தளவரிசை அமைந் திருந்த வட்ட வடிவமான முற்றத்தில் வேல் பிடித்த வீரர்கள் பலர் அணி வகுத்து நின்றார்கள். இடையிடையே சில வீரர்கள் சுடர் விட்டெரிந்த தீவர்த்திகளைப் பிடித்துக் கொண் டிருந்தார்கள்.

அவர்களுக்கு நடுவில், இரட்டைக் குதிரை பூட்டிய அலங்கார ரதம் ஒன்று காணப்பட்டது. ரதத்துக்குச் சமீப மாகப் பல வீரர்கள் சேர்ந்து பிடித்துக் கொண்டு நின்ற ரிஷபக் கொடியானது வானளாவிப் பறந்தது. திறந்த கோட்டை வாசல் வழியாகக் குபுகுபு வென்று புகுந்து அடித்த வாடைக் காற் றில் அந்தக் கொடி சடசடவென்று சப்தித்துக் கொண்டு ஆடியதானது, புதிய கோட்டைத் தளபதிக்கு உற்சாக மாக வரவேற்புக் கூறுவதுபோல் இருந்தது.

ரதத்தில் குமார சக்கரவர்த்தி மாமல்ல நரசிம்மர் வீற்றிருந்தார். ரதசாரதி கண்ணபிரான் குதிரைகளின் கடிவாளங்களை இழுத்துப் பிடித்துக் கொண்டு கீழே பூமியில் நின்றான்.

கதவு திறந்து தளபதி பரஞ்சோதி உள்ளே பிரவேசித்தாரோ இல்லையோ, மாமல்ல நரசிம்மர் ரதத்திலிருந்து கீழே குதித்தார். அவர் கையினால் சமிக்ஞை செய்யவும், அருகில் நின்ற வீரர்களில் ஒருவன் இடிமுழக்கம் போன்ற குரலில், "சளுக்கப் புலிகேசியின் அரக்கப் படை களைக் கதிகலங்க அடித்த அசகாய சூரர், வீராதி வீரர் தளபதி பரஞ்சோதி வருக! வருக!" என்று கூவினான்.

அவனுடைய குரலின் பிரதித்வனியே போல், "தளபதி பரஞ்சோதி வருக! வருக!" என்று நூற்றுக்கணக்கான வீரர்களின் குரல்கள் கோஷித்த சத்தம் வானை அளாவிற்று.

அந்தக் கோஷத்துடன் கலந்து, சங்கு களும் கொம்புகளும் தாரைகளும் தப்பட்டைகளும் முரசங்களும், பேரிகை களும் ஏககாலத்தில் முழங்க, அந்தப் பெரு முழக்கமானது கோட்டை வாசலிலே எதிரொலியை உண்டாக்க, இந்தப் பலவகைச் சத்தங்களும் சேர்ந்து



அங்கே நின்ற வீரர்களுக்கு உற்சாக வெறியை உண்டாக்கின.

இத்தகைய வரவேற்பைப் பரஞ் சோதி சற்றும் எதிர்பார்க்கவில்லை என்பது அவருடைய முக பாவத்தி லிருந்து நன்கு தெரிந்தது. சட்டென்று குதிரை மீதிருந்து அவர் தரையில் குதித்து, ரதத்தின் அருகில் குமார சக்கரவர்த்தி நின்ற இடத்தை அணு கினார்.

தரையிலே விழுந்து நமஸ்கரித்துக் குமார சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்த விரும்பிய பரஞ்சோதியை மாமல்ல நரசிம்மர் தடுத்து இரு கரங்க ளாலும் அணைத்துக் கொண்டார்.

சற்று நேரம் வரையில் இருவராலும் ஒன்றுமே பேச முடியவில்லை. முதலில் குமார சக்கரவர்த்திதான் பேசினார் :

"தளபதி! நாளெல்லாம் நிற்காமல் பிரயாணம் செய்து வந்தீர் போலும்!

களைப்புக் காரணமாக உம்மால் பேசவே முடியவில்லை.''

''பிரபு! நான் பேச முடியாமல் இருப்பதற்குக் காரணம் களைப்பு அல்ல; தங்களுடைய அளவில்லா அன்புதான் காரணம்! கோட்டை வாசலுக்கு வந்து என்னை எதிர் கொள்வீர்கள் என்று நினைக்கவில்லை...''

''மகாவீரரே! கோட்டைக்கு வெளியிலே கிளம்பக்கூடாதென்று மட்டும் சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிடாமல் இருந்தால், ஒரு காத தூரம் உம்மை எதிர்கொள்வதற்கு வந்திருப்பேன். சென்ற எட்டு மாத காலமாக உம்மைப் பார்க்க வேணுமென்ற ஆவல் என் உள்ளத்தில் எப்படிப் பொங்கிக் கொண்டிருந்தது என்பது உமக்கு எவ்விதம் தெரியும்?'' என்று குமார சக்கரவர்த்தி கூறி, முதலில் தாம் ரதத்தில் ஏறிக் கொண்டு, பரஞ்சோதியையும் தம் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார்.



-ாரதி கண்ணபிரானும் முன் தட்டில் ஏறி உட்கார்ந்தான்.

''தளபதி! நேரே அரண்மனைக்குப் போகலாமா? உமது விருப்பம் என்ன?'' என்று மாமல்லர் கேட்க, பரஞ்சோதி, ''பிரபு! போகும்போதே காஞ்சி நகரைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு போக விரும்புகிறேன். கொஞ்சங்கூடக் காலத்தை வீண் போக்குவதற்கில்லை. இந்த வீரர்களை யெல்லாம் முன்னதாக அனுப்பி விடலாம்'' என்றார்.

குமார சக்கரவர்த்தி கட்டளையிட்ட தன் பேரில் அங்கிருந்த வீரர்கள் பரஞ்சோதியுடன் வந்தவர்களையும் அழைத்துக் கொண்டு முன்னால் விரைந்து சென்றார்கள்.

சாரதி கண்ணபிரான் குதிரைகளின் தலைக் கயிற்றை லாகவமாக ஒரு குலுக்கு குலுக்கியதும் ரதமும் அங்கிருந்து நகர்ந்தது.

கோட்டை வாசலின் கதவுகள் மீண்டும் சாத்தப்பட்டன. சிறிது நேரம் ஒரே கலகலப்பாயிருந்த வடக்குக் கோட்டை வாசலில் பழையபடி நிசப்தம் குடிகொண்டது.

## இரண்டாம் அத்தியாயம்

# பழைய நண்பர்கள்

ரதம் கோட்டையின் உள் வாசலைக் கடந்து காஞ்சிமா நகரின் அழகிய விசாலமான வீதிகளில் போகத் தொடங்கியபோது, பரஞ்சோதிக்குப் பழைய நினைவு வந்தது. எட்டு மாதங்களுக்கு முன்னால் ஒரு நாள் இதே அந்தி நேரத்தில், இதே விதமாகப் பூரணச் சந்திரன் கீழ் வானத்தில் உதயமாகிக் கொண்டிருந்த சமயத்தில், தாம் தெற்குக் கோட்டை வாசல் வழியாகக் காஞ்சி நகருக்குள் பிரவேசித்ததும், அன்றிரவு நிகழ்ந்த சம்பவங்களும் அவர் உள்ளத்தில் விரைவாகத் தோன்றின. அன்று அவர் காஞ்சியில் பிரவேசித்ததற்கும் இன்று பிரவேசித்ததற்கும் எவ்வளவு வித்தியாசம்?

''தளபதி! என்ன ஒரேயடியாக மௌனத்தில் ஆழ்ந்து விட்டீர்கள்?'' என்று மாமல்லர் கேட்டதும், பரஞ்சோதி சிந்தனை உலகிலிருந்து வெளி உலகத்துக்கு வந்தார்.

''மன்னிக்க வேண்டும், பிரபு! தங்களுடைய அன்பானது அப்படி என்னை மெய்ம்மறக்கச் செய்து விட்டது. தென்னாட்டிலுள்ள மல்லர்களை யெல்லாம் வென்று மகாமல்லர் என்று பட்டம் பெற்ற பல்லவ குமாரரின் பக்கத்தில் சமமாக உட்கார்ந்து போவது நான் தானா என்று எனக்கே சந்தேகமாயிருக்கிறது.''

''நல்ல சந்தேகம்! உமக்குப் பக்கத்தில் உட்கார்ந்து செல்வது எனக்கல்லவா கௌரவம்! ராட்சசப் புலிகேசியின் சேனா சமுத்திரத்தை மந்தரகிரியைப் போல் கடைந்து கலக்கிய மகா வீரரல்லவா நீர்? வாதாபி யானைப்படையாகிய மேகத் திரளைச் சிதற அடித்த பெரும் புயற்காற்று அல்லவா நீர்?''

''பல்லவக் குதிரைப் படையின் சாகசச் செயல்களின் புகழ் காஞ்சி வரையில் வந்து எட்டியிருக்கிறதா?'' என்று தம்முடைய புகழைப் படையின் புகழாக மாற்றிக் கூறினார் தளபதி.

''ஏன் எட்டவில்லை? வாரந்தோறும் சக்கரவர்த்தி அனுப்பிய ஓலைகளிலிருந்து நீர் தலைமை வகித்த குதிரைப் படையின் வீரச் செயல்களை யெல்லாம் அவ்வப்போது தெரிந்துகொண்டோம். தெரிந்த விவரங்களைப் பறையறைந்து நாடு நகரமெல்லாம் தெரியப்படுத்தினோம்'' என்றார் மாமல்லர்.

''ஆஹா! தங்களுடைய அன்பினால் எப்படி மெய்ம்மறந்து போனேன்,

# நீங்கள் செய்வது எதுவானாலும் சரி, பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை சிறந்த முறையில் செய்ய உதவுகிறது.



பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் ஒரு 100 வாட் பல்பினைப் போல் இருபங்கு ஒளி தருகிறது. இருப்பினும் இதற்கு ஒரு 40 வாட் பல்புக்கான அளவு மின்சாரமே தேவைப்படுகிறது. பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்தி மின்சாரத்தை மிச்சப்படுத்துங்கள்.
தரம் மற்றும் உழைப்பு இவ்விஷயத்தில் பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டே வாங்குவதற்குச் சிறந்ததாகும். கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் யூனிட் தரமான உறுப்புகளுடன் முன்கூட்டியே ஒயர் செய்யப்பட்டதாகும். பொருத்துவதற்கு எளிதானது. உபயோகிப்பதற்கு சிக்கனமானது. வேலைகளை சிறந்த முறையில் செய்ய இது உதவுகிறது— உங்கள் கடையிலும் சரி, வீட்டிலும் சரி.

அரைப்பங்கு
சிலவில்
இருபங்கு
ஒளி!

சிறந்த ஒரு லாம்ப் வேண்டுமா?
அதை முதலில் அளிப்பது பிலிப்ஸ்

## பிலிப்ஸ்




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

## தலைவலி அல்லது ஃப்ளூவிலிருந்து விரைவில் நிவாரணம்!



# ஸலோஃபென்
## வலி நிவாரண மாத்திரை

அமிர்தாஞ்சன் லிமிடெட் தயாரிப்பு

தலைவலி, ஃப்ளூ, பல்வலி, உடல்வலி ஆகியவற்றிலிருந்து ஸலோஃபென் உடனடியாக நிவாரணம் அளிக்கிறது. அது நம்பகமானது. டாக்டர்கள் கையாளும் மருத்துவ முறைப்படி ஸலோஃபென் தயாரிக்கப்படுகிறது.




ads/AS/1928 THB



# கண்ணாடியின்றி கண் பார்வை பெறலாம்!

## உங்களுக்கு இதைவிட மட்டற்ற மகிழ்ச்சி தரக்கூடிய செய்தியும் வேறு உண்டோ!

## 'காண்டாக்ட் லென்ஸ்'களை உபயோகியுங்கள்.

இந்த 'காண்டாக்ட் லென்ஸ்'கள் கிட்டப்பார்வை, தூரப்பார்வை மற்றும் அஃபாகிக் (காடராக்ட் ஆப்ரேஷனுக்குப்பின்) கெராடோ கோனஸ், அனிஸோமெட்ரோபியா, அனிஸிகோனியா, பாலியோபியா, போன்ற பார்வை குறைபாடு உடையவர்களுக்கு மிகவும் சிறந்தது.

'காண்டாக்ட்லென்ஸ்'களை வெகுசுலபமாக நீங்களே உங்கள் கருவிழிகளில் பொருத்திக்கொள்ளலாம். . . கழற்றியும் விடலாம்—சில நாட்கள் பழகிய பின்! உங்கள் விழிகளில் பொருத்தப்பட்ட இச்சிறு 'காண்டாக்ட்லென்ஸ்'கள் மற்றவர்கண்களுக்கு தெரியாது. ஆகவே உங்கள் எழில் மிகு முகத் தோற்றத்தில் எவ்வித மாறுதலும் இல்லை!

adsindia

**உங்கள் கண் வைத்தியரை ஆலோசனைக்கு அணுகுங்கள்**

மற்ற விபரங்களுக்கு: **ஆசியா காண்டாக்ட் லென்ஸ் லாபரெட்டரி**

லாபரெட்டரி : 13, கில்கிரிஸ்ட் அவென்யூ, ஹேரிங்டன் ரோடு, சென்னை - 31

அலுவலகம் : 5-G, வீரபத்ர அய்யர் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை-34

போன்கள் :

662600 82722 82595

பார்த்தீர்களா? சக்கரவர்த்தி கொடுத்த ஓலையைத் தங்களிடம் கொடுக்க மறந்து விட்டேன்!'' என்று கூறிக் கொண்டே பரஞ்சோதி இடுப்பில் பத்திரமாகச் செருகியிருந்த ஓலைக் குழாயை எடுத்துக் கொடுத்தார்.

''தளபதி! இது சக்கரவர்த்தி கொடுத்த ஓலைதானே? எங்கேயாவது வழி நடுவில் ஓலை மாறி விடவில்லையே?'' என்று மாமல்லர் சிரித்துக் கொண்டே கேட்டார்.

''அந்த வரலாறுகூடத் தங்களுக்குத் தெரியுமா?'' என்று பரஞ்சோதி கூறிய போது அவருடைய முகத்தில் மலர்ந்த புன்னகையில் நாணமும் கலந்திருந்தது.

''ஆமாம், தெரியும்! நீர் இங்கிருந்து போகும் வழியில் வஜ்ரபாஹுவைச் சிநேகம் செய்துகொண்டது முதற்கொண்டு எல்லாம் எனக்குத் தெரியும்...'' என்றதும், இரண்டு பேருமே 'கலகல'வென்று நகைத்தார்கள்.

மாமல்லர் மேலும் தொடர்ந்து கூறினார்: ''சக்கரவர்த்தி எட்டு மாதங்களுக்கு முன்பு இங்கிருந்து கிளம்பிய போது, 'நானும் வருவேன்' என்று எவ்வளவோ பிடிவாதம் பிடித்தேன். சக்கரவர்த்தி அதை உறுதியாக மறுத்துவிட்டார். அப்படியானால் வாராவாரம் போர்க்களத்தில் நடப்பதையெல்லாம் விவரமாக எழுதி அனுப்ப வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். அந்தப் படியே சக்கரவர்த்தி எழுதி அனுப்பிவருகிறார். தளபதி! இன்றைக்குத்தான் நான் உம்மை முதன் முதலில் பார்க்கிறேன். ஆனாலும் நீர் எனக்குப் புதியவர் அல்ல; சக்கரவர்த்தி அனுப்பி வந்த ஓலைகளின் மூலமாக உம்முடன் சென்ற எட்டு மாதமும் பழகி வந்திருக்கிறேன். உம்மை இன்று பார்த்ததும், புதிய மனிதராகவே எனக்குத் தோன்றவில்லை. வெகு காலம் பழகிய சிநேகிதராகவே தோன்றியது......''

''பிரபு! எனக்கும் அப்படியேதான் தோன்றுகிறது. கிளிப் பிள்ளையைப் போல் தாங்கள் சொன்னதையே திருப்பிச் சொல்வதாக நினைக்க வேண்டாம். உண்மையில், அப்படித்தான். ஏனென்றால், சென்ற எட்டு மாதங்களில் சக்கரவர்த்தி தங்களைப் பற்றி ஏதாவது பேசாத நாளே கிடையாது. அதனால், எனக்கும் தாங்கள் புதிய மனிதராகவே தோன்றவில்லை. வெகு காலம் பழகிய மனிதராகவே தோன்றியது.''

குமார சக்கரவர்த்தி பரஞ்சோதியின் கரங்களை இறுகப் பிடித்துக் கொண்டு, ''தளபதி! அப்படியானால் நாம் இருவரும் பாக்கியசாலிகள்தாம். தெய்வப் புலமை திருவள்ளுவரின் வாக்கு நம் விஷயத்தில் முற்றும் உண்மையாயிற்று.

*** புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்**
**நட்பாங் கிழமை தரும்**

என்று தமிழ்மறை சொல்லுகிறதல்லவா? திருக்குறள் ஆசிரியருக்குப் பொய்யாமொழிப் புலவர் என்ற பட்டம் முற்றும் பொருத்தமானது!'' என்று உற்சாகமாகக் கூறினார்.

அதற்குப் பரஞ்சோதி, ''பல்லவ குமாரரே! மன்னிக்க வேண்டும். நான் கல்வி அறிவு என்பதே இல்லாதவன். பள்ளிக்கூடத்தின் நிழலில் 'கூட ஒதுங்காதவன். திருவள்ளுவரையும் அறியேன்; அவருடைய திருக்குறளையும் அறியேன். எனக்குக் கல்வி புகட்டும் பொறுப்பைச் சக்கரவர்த்தி தங்களுக்கு அளித்திருக்கிறார். ஓலையைப் படித்துப் பார்த்தால் தெரியும்'' என்றார்.

இந்த வார்த்தைகள் குமார சக்கரவர்த்திக்குச் சிறிது கூச்சத்தை உண்டாக்கின. ''அதற்கென்ன, தளபதி! சக்கரவர்த்தியின் கட்டளை எதுவானாலும் சந்தோஷமாக நிறைவேற்றிவைக்க நான் கடமைப்பட்டவன்...'' என்று அவர் சொல்லி முடிப்பதற்குள், தளபதி பரஞ்சோதி, ''ஆனால் எனக்குக் கல்வி கற்பிக்கும்படி சக்கரவர்த்தி தங்களுக்கு ஆக்ஞை இட்டிருப்பது என்னுடைய நன்மைக்காக அல்ல; தங்களுடைய நன்மைக்காகத்தான்'' என்றார்.

மாமல்லர் ஒன்றும் விளங்காமல் பரஞ்சோதியின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க, அவர் மேலும் கூறுவார்: ''ஆம், பிரபு! தங்களிடத்தில் எல்லா நல்ல குணங்களும் இருக்கின்றனவாம். ஆனால், பொறுமையும், நிதானமும் மட்டும் குறைவாம். எனக்குக் கல்வி புகட்ட ஆரம்பித்தீர்களானால், உங்களுக்கும் பொறுமை வந்து விடுமாம்! என்னுடைய அறிவுக் கூர்மையில் சக்கரவர்த்திக்கு அவ்வளவு நம்பிக்கை!'' என்றதும், மாமல்லர் குபீரென்று சிரிக்க, அதைப் பார்த்துப் பரஞ்சோதி சிரிக்க இருவரும் சிரிப்பதைப் பார்த்து அடக்கி அடக்கிப் பார்த்தும் முடியாமல் சாரதி கண்ணபிரானும் சிரிக்க, இந்தக் கோலாகலம் என்னத்திற்கு என்று தெரியாமல் ரதத்தை இழுத்துச் சென்ற குதிரைகளும் கனைத்தன.

குதிரைகள் தங்களுக்குச் சுபாவமான இனிய குரலில் கனைப்பதைக் கேட்டு மறுபடியும் ஓர் ஆவர்த்தம் மூவரும் சிரித்தார்கள்.

(தொடரும்)

* சாதாரணமாக ஒருவரை யொருவர் அடிக்கடி சந்தித்துக் கலந்து பழகுவதனால் நட்பு உண்டாகி வளர்கிறது. ஆனால், இரண்டு பேருக்குள் ஒத்த உணர்ச்சி இருக்கும் பட்சத்தில் மேற் சொன்னவாறு கலந்து பழகுதல் இல்லாமலே நட்பாகிய தலைசிறந்த உறவு ஏற்பட்டுவிடும்.

# ஜீஸஸ்

மக்கள் செய்த பாவச் செயலுக்கு மன்னிப்புக் கோரி மனப்பூர்வமாகத் தம் உயிரையே அர்ப்பணித்த தியாக மூர்த்தி ஏசுநாதரின் புனித வரலாறு திரைப்படமாக்கப்பட்டிருக்கிறது. அமலோத்பவர் என்று அழைக்கப்படும் ஏகபெருமானின் எளிமையான அவதாரம், அன்னை மேரியின் அல்லல், மன்னன் ஹிராதின்கொடுங்கோன்மை, ஏசுநாதரின் அநுக்கிரக சக்தி இவற்றையெல்லாம் அருமையாகப் படமாக்கியிருக்கிறார்கள். அதுவும், முள் முடி அணிந்து, தோளில் சுமக்க முடியாத பெரும் சிலுவைப் பாரத்துடன் கல்வாரி மலையில் ஏறிய அந்தத் தேவகுமாரனின் புனிதப் பிரயாணம் கல் மனத்தையும் கரையச் செய்யும். பரம பிதாவைச் சிலுவையில் அறைந்த கொடுமையான இறுதிக் காட்சி மிகவும்உருக்கமாயிருக்கிறது.

ஏசுநாதராக யாரைப் போட்டிருக்கிறார்கள் என்று ஆர்வத்தோடு பார்த்தேன். அன்னை மேரியாக நடித்த நடிகையின் சாந்தம் தவழும் இயற்கையான நடிப்பைக் கண்டதும் என் ஆர்வம் இன்னும் அதிகமாயிற்று.

முரளி தாஸ் என்னும் புது முகத்துக்கு ஏசுநாதராக நடிக்கும் அரிய வாய்ப்பை அளித்திருப்பது துணிந்து புரிந்த செயல்தான்! தயாரிப்பாளர்கள் அதற்காகப் பாராட்டுக்குரியவர்கள்.

மலை மேல் பிரசங்கம், தொழுநோயாளிக்கும் வேசிக்கும் மனம் இரங்கி அவர் அநுக்ரகித்தது, அந்தப் புனித மூர்த்தியின் விழிக் கடைப் பார்வைக்காக ஏங்கிய ஆயிரம் ஆயிரம் மக்கள் வெள்ளம் இவைகளெல்லாம் மெய்சிலிர்க்க வைக்கின்றன.

இயற்கை எழில் கொஞ்சும் கேரள நாட்டு வளம் படப்பிடிப்புக்குப் பெரிதும் கை கொடுத்து உதவியிருக்கிறது.

சத்திய வேதமாகிய பைபிளின் புனிதத்துவத்துக்குச் சிறிதும் மாசு ஏற்படாதவாறு இன்றியமையாத வரலாற்றுச் சான்றுகளை, பக்தி சிரத்தையோடு தொகுத்துத் திரைக்கதையைத் தயாரித்து டைரக்ட் செய்திருக்கும் பி.ஏ. தாமஸ் பாராட்டுக்குரியவர்.

புனித வரலாறானாலும், திரைப் படத்தில் கவர்ச்சி தேவைப்படுகிறதே! அதற்கு ஜெயலலிதாவும் நிர்மலாவும் நிறைய உதவியிருக்கிறார்கள்! கவர்ச்சி பொங்கும் நடனப் பெண்ணாக வந்து மன்னர் மாளிகையில் விறுவிறுப்பாக நடனமாடி, அனைவரையும் உற்சாகப்படுத்துகிறார் ஜெயலலிதா. வேசி மரியத்தின் பாகத்தை ஏற்றிருப்பவர் நிர்மலா. விலை மாதாக வந்தபோது இருந்த கவர்ச்சித் தோற்றத்துக்கும், ஏக பெருமானிடம் பாவ மன்னிப்புக் கோரியபோது காணப்பட்ட நெகிழ்ந்த நிலைக்கும் நிர்மலாவிடம் நல்ல வேற்றுமையான நடிப்பைக் காண முடிகிறதே! சபாஷ் நிர்மலா!

ஸ்நாபகர் என்ற புனித போதகராக வரும் ஜெமினி கணேசன் தம் பாத்திரத்தைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

யுனிவெர்ஸல் பிக்சர்ஸாரின் ''ஜீஸஸ்'' ஒரு வண்ணப் படம். மலையாளத்திலும் தமிழிலும் தயாரிக்கப்பட்டு மொத்தமாகத் தமிழாக்கப்பட்டிருக்கிறது.

இந்த நல்ல படத்துக்கு நல்லாதரவு தர வேண்டியது ரசிகப் பெருமக்களின் கடமையாகும்.



# ராஜபார்ட் ரங்கதுரை

பலவிதமான பாத்திரப் படைப்புக்களில், பலவிதமான உடைகளில், பலவிதமான தோற்றங்களில் நடிகர் திலகம் சிவாஜி கணேசனைப் பார்க்க விரும்புகிறவர்களுக்கு, சித்ரமாலா கம்பைன்ஸ் குகநாதன் அளிக்கும் வண்ணப் படமான ''ராஜபார்ட் ரங்கதுரை'' நல்விருந்தாக அமைந்திருக்கிறது. அல்லி அர்ஜுனன், பவளக்கொடி, வள்ளி கல்யாணம், அரிச்சந்திரன் இப்படிப் பல்வேறு நாடகங்களையும் கொண்டு படம் சுவையாக இருக்கிறது. தம்பி பெரிய பணக்காரன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு, ஓர் உண்மையான பணக்காரப் பெண்ணை ஏமாற்றித் தாலி கட்டி விடுகிறான்; அதைப் புரிந்து கொண்ட அண்ணனின் மன நிலையை நடிகர் திலகம் நம் முன் கொண்டு வந்து நிறுத்தி விடுகிறார். பல்வேறு முக பாவங்களையும், அவர் முகத்தில் காண முடிகிறது. அவரது நடிப்புத் திறமைக்கு இந்தப் படம் ஓர் உரைகல்.

எம். என். நம்பியார், ராமதாஸ் இருவரும் வில்லன்கள். அவர்களுக்குப் பழகிவிட்ட பாத்திரங்கள்தான். நமக்கு மட்டும் என்ன? ஏற்கனவே பலமுறை பார்த்துப் பழகிப்போன பாத்திரங்கள்தான்.

உஷா நந்தினிக்குத் திரைக் கதையில் வரும் நாடகத்தில் நடிக்க வாய்ப்புக் கிடைக்கிறது. அந்தக் கட்டத்தில் நன்றாக நடித்திருக்கிறார்.

நடிகர் திலகத்துக்கு அடுத்தபடியாக நடிப்பில் உயர்ந்து நிற்பவர் ஸ்ரீகாந்த். ராஜபார்ட் ரங்கதுரையின் தம்பி பாஸ்கராக வந்து பெரிய பணக்கார வீட்டுப் பிள்ளையென்று சாதுரியமாகப் புளுகு மூட்டைகளை அள்ளி வீசும்பொழுது நம் பாராட்டைப் பெறுகிறார்.

நாடகக் காட்சிகள் கருக்கமாகவும் சுவாரசியமாகவும் அலுப்புத் தட்டாமலும் படமாக்கப் பட்டிருப்பது பாராட்டுக்குரியது. ஒளிப் பதிவு மிகவும் சிறப்பாக இருக்கிறது: அநுபவம் மிக்க பி. மாதவனின் டைரக்ஷன் படத்தின் பெருமையை உயர்த்தியிருக்கிறது.

வி. கே. ராமசாமி நாடகம் நடத்துபவராகவும், 'வாத்தியா'ராகவும் வந்து நகைச்சுவைப் பகுதிக்கு உயிர் கொடுக்கிறார். சுருளி ராஜன், மனோரமா முதலியவர்கள் வந்து அவருக்குக் கை கொடுத்திருக்கின்றனர்.

(ஆமாம், வி. கே. ராமசாமிக்கு என்னத்துக்காகப் பெண் வேஷம் போட்டு அசிங்கமாகக் காட்டுகிறார்கள்? வேதனைதான்!)

பாலகன் ரங்கதுரையாக வந்து ரயிலில் பாடிப் பிச்சையெடுக்கும் மாஸ்டர் பிரேம் குமார் உயிர்த் துடிப்போடு நடிக்கிறான். அவனுக்கு ஒரு சபாஷ் போடுகிறோம். ரங்கதுரையின் தங்கையாக வரும் ஜெயா உருக்கமாக நடித்து மனத்தில் பதிந்து விடுகிறார்.

கதை, வசனம் பாலமுருகன் எழுதியிருக்கிறார். சங்கரதாஸ் சுவாமிகள், கண்ணதாசன் இருவரும் பாடிய பாடல்கள் பத்து இருக்கின்றன! பழைய பாடல்கள் பல நாடகக் காட்சிகளோடு வருவதால் அவ்வளவு சிரமமாய்த் தெரியவில்லை.

''அம்மம்மா....'' என்ற பாட்டைப் பல தடவை கேட்டு உருகலாம். அதுவும், சிவாஜியின் முக பாவங்களோடு பாட்டைக் கேட்டால் கல் மனமும் கரையும்.

''ராஜபார்ட் ரங்கதுரை'' பல்கலையும் கொண்டு நடிப்புக்கு இலக்கணம் வகுக்கும் பாராட்டுக்குரிய படம்.

—காந்தன்





## 'நயா நஷா'

கருத்து அமைந்த கதைக் கரு.

'இன்றைய சமுதாயம் வாழ்வின் உண்மையான இன்பத்தை மறந்து போலி இன்பத்தை நாடி எப்படிச் சீரழிந்து போகிறது? எத்தனை செல்வம் இருந்தும் ஊருக்காகப் பால் குடித்து மக்கள் எப்படியெல்லாம் நிம்மதி இழந்து தவிக்கின்றனர்? பெற்றோரின் அன்பும் அரவணைப்பும் இல்லாமல், இளைஞர் சமுதாயம் எப்படித் தறி கெட்டு அலைகிறது? அவர்களுக்குப் பள்ளிப் படிப்பு எப்படி 'போர்' அடிக்கிறது? அதோடு மன நிம்மதி வேண்டி மயக்க மாத்திரைகளில் எப்படித் தங்களை மறக்க முயல்கின்றனர்?' - இப்படி ஒரு பிரச்னையை எடுத்து அலசித் தீர்வு காண முயலும் சிறுகதை. படத்தில் வரும் கதாநாயகிக்கு வாழ்க்கை 'போர்' அடிக்கிறது என்றால், பார்க்கப் போகும் ரசிகர்களுக்குக் கதையைக் கொண்டு சென்றிருக்கும் முறை 'பர் போர்' அடிக்கிறது.

'பாப்' இசை செவிகளைத் துளைக்கிறது; காபரே நடனம் கண்களைக் குருடாக்குகிறது.

கலை இலக்கணப்படி, அதாவது ரச சாஸ்திரத்தின் கூற்றுப்படி, எந்தக் கலையும், அவலக் கலையானாலும், அருவருப்புக் கலையானாலும், அது இன்பம் பயக்கிறதாக அமைய வேண்டும். நிஜ வாழ்க்கையில் நாம் பெறும் உணர்வுகள், இலக்கியமாக மாறும் பொழுது, ரசிகர்களின் ஆதரவைப் பெற வேண்டும். ஆனால் தத்ரூபமாக எடுப்பதாக நினைத்துக் கொண்டு எடுக்கப்பட்ட இப்படம் ரசிகர்களின் அநுதாபத்தைப் பெறவில்லை; அருவருப்பையே அடைகிறோம்.

கதாநாயகியாக வரும் நந்தா, தாம் ஏற்ற பாத்திரத்தைத் திறம்பட நடித்துக் காட்டியிருப்பது ஒன்றே இந்தப் படத்தில் 'போர்' அடிக்காத விஷயம். மற்றவர்களின் நடிப்பு மனத்தில் நிற்கவில்லை. டைரக்ஷனில் உள்ள கோளாறினால், படம் பல இடங்களில் தானாகவே முடிகிறது. அப்புறம் தொடங்கி அறுக்கிறது. புதிய போதையில் மயங்குகிறவர்கள் இப்படத்தில் அறுவையின் சிகரத்தைக் காணலாம்.

## சௌதாகர்

இன்றைய பட ரசிகர்கள் பெரிதும் ஏமாந்து போவார்கள்! பழகிப்போன கதை, அடிதடி, குத்து — உதை, 'காபரே' ஆட்டவதை — இவற்றைக் காண முடியவில்லையே என்று! அப்படி ஒரு வியாபார மோசடி நடந்திருக்கிறது 'சௌதாகர்' படத்தில்.

இப்படி ரசிகர்களை ஏமாற்ற முனைந்த ராஜஸ்ரீ பிக்சர்சார், 'எங்கே ரசிகர்கள் ஏமாற்றி விடுவார்களோ' என்று அஞ்சிச் சில பழைய காட்சிகளைச் சேர்த்து விட்டனர்!

போனால் போகட்டும், நரேந்திரநாத் மித்ராவின் 'ரஸ்' என்னும் கதை ரசமாகப் படமாக்கப்பட்டிருக்கிறதே, போதாதா?

மோதி ஒரு மரமேறி. அந்தப் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் அமிதாப் பச்சன். மோதி ஈச்சம் சாறு எடுத்து, வெல்லம் காய்ச்சி வியாபாரம் செய்து பிழைப்பவன். அவனுக்கு வெல்லம் காய்ச்ச உதவுபவள் மாஜு என்னும் விதவை. அவள் கை வெல்லத்துக்கு ஒரு தனி ருசி. அதனால் சந்தையில் மோதியின் வெல்லத்துக்குப் பெரும் கிராக்கி. மாஜுவாக நடிப்பவர் நூதன்.

பூல்பானோ என்னும் கன்னியிடம் காதல் கொள்ளுகிறான் மோதி. பத்மா கன்னாதான் பூல்பானோ. அவரது மிரளும் விழிகளும் துடிக்கும் முரட்டு உதடுகளும் அளவுக்கு மீறியே நடிக்கின்றன.

பூல்பானோவின் தந்தை கேட்கும் 'மெஹர்' (பரிசம்) தொகை மோதியின் சக்திக்கு அப்பாற்பட்டது. அதனால் அவன் ஒரு தந்திரம் செய்கிறான். மாஜுவை மணம் புரிந்துகொள்கிறான். காரணம், வெல்லம் காய்ச்ச அவளுக்கு அவன் தரும் கூலியை மிச்சப்படுத்தி விடலாம் என்பதுதான்.

பணம் சேர்த்ததும் மாசற்ற மாஜுவிடம் மாசு கற்பித்துத் 'தலாக்' கோரும் இடத்தில் அடக்கமாக நடிக்கும் பச்சனின் இயல்பு பளிச்சிடுகிறது. அந்தக் கட்டத்தில் ஆத்திரத்தைக் கொட்டும் நூதன் நடிப்பு ஏ ஒன்!

மாஜுவின் வெல்லத்துக்கு இருந்த மவுசு பூல்பானோவின் வெல்லத்துக்கு இல்லாமற் போகவே, கணவன் — மனைவியிடையே தகராறு வலுக்கிறது. தனது வெல்லத்தின் இழந்த பெருமையை மீண்டும் பெற மாற்றானின் மனைவியாகிவிட்ட மாஜுவிடம் செல்லும் கட்டத்தில், முடிவை ரசிகர்களின் கற்பனைக்கு விட்டுக் கதை முடிகிறது.

வெல்லத்தைச் சுற்றி ஈயாக மொய்க்கும் வசனம் அளவுக்கு மீறி விட்டது. இந்த லொட லொடாவுக்கு மாற்று ரவீந்திர ஜெயினின் இசையும் பாடலும். — ர. வீ.



பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | | தங்கும் இடம் |
|---|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை | 10-00 -- 11-00 | மணி அண்டு கோ., மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை | 3-00 -- 6-00 | பாம்பே ஹால் வாட்ச் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை | 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு, கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை | 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை | 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை | 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை | 5-00 -- 6-30 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை | 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை | 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை | 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் ஸப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை | 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை | 3 - 5 | |
| ,, செவ். பேட்டை | 16 | மாலை | 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை | 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை | 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை | 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை | 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சீபுரம் | 19 | காலை | 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை | 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை | 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை | 3-00 -- 5-00 | P. L. R. அண்டு கோ., தெப்பக்குளம், மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை | 10-00 -- 11-00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை | 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சீப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை | 5-00 -- 6-00 | மீனாட்சி டுபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை | 8-30 -- 10-00 | பாரத் வாட்ச், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை | 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ண மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை | 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை | 8-00 -- 11-00 | ப்ளாக் 13, வைதீக சமாஜம், தீபசாலை. |
| சிதம்பரம் | 23 | மாலை | 3-00 -- 4-00 | பாரதிய ஆயுர்வேத அமிர்த நிலையம், கமலேஸ்வரன் கோயில் தெரு. |
| விருத்தாசலம் | 23 | மாலை | 5-00 -- 6-00 | K. குப்புசாமி நாயுடு வீடு, கடைவீதி. |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை | 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை | 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை | 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை | 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை | 3 - 5 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை, B-II, 1வது கிராஸ், தில்லைநகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

**ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,** கரூர் (போன்: 87) திருச்சி ஜில்லா

# கூடை கூடையாகப் புகழ்!

எழும்பூர் ஸ்டேடியத்தில் தேசிய கூடைப் பந்தாட்ட சாம்பியன் பட்டத்துக்குப் பதினேழு ராஜ்யங்களும், இந்திய ரயில்வேயும், சர்வீஸஸ் கோஷ்டியும் போட்டியிட்டன.

விமானப் படை பிளைட் லெப்டினெண்ட் மன்மோகன் சிங் சர்வீஸஸ் கோஷ்டியின் காப்டன். அர்ஜுன விருது பெற்றவர். சமீபத்தில் மணிலாவில் நடந்த ஆசிய கூடைப் பந்தாட்டப் போட்டிக்குக் காப்டனாகச் சென்று வந்தவர். இறுதி ஆட்டத்தில் ரயில்வேயிடமிருந்து வெற்றியைத் திருப்ப காப்டன் மன்மோகன் சிங்கின் அபாரமான 32 எண்ணிக்கைகள் காரணமாக அமைந்தன.

''எனக்கு இந்த வருஷம் ஆகஸ்டில்தான் திருமணமாயிற்று. என் மனைவி அம்ருதாவை இந்தத் தேசியப் போட்டிக்கு அழைத்து வந்திருக்கிறேன்! அவள் ஆட்ட மைதானத்தில் அமர்ந்திருப்பது எனக்கு ஓர் இன்ஸ்பிரேஷன்!'' என்றார் காப்டன் மன்மோகன் சிங்.

''நீங்கள் மணிலாவுக்கு உங்கள் மனைவியை அழைத்துச் செல்லவில்லையா?''

''இல்லை. அயல்நாடு செல்ல ரொம்பச் செலவாகுமே? தம்பதி சமேதராகத் தமிழ் நாட்டுக்குப் படையெடுத்திருக்கிறோம்'' என்றார் விமானப் படை அதிகாரி மன்மோகன்.

''உங்கள் மணிலா அநுபவங்களைச் சொல்லுங்கள்!''

''மணிலாவில் இன்டோர் ஸ்டேடியம். அதுவும் மர மைதானத்தில் ரப்பர் பந்தில் ஆடுவது இந்திய ஆட்டக்காரர்களுக்குப் புதிய அநுபவம். இங்கே சிமெண்ட் தள மைதானம் அல்லது மண் தரையில் இந்திய ஆட்டக்காரர்கள் பழக்கப்பட்டவர்கள். மர மைதானத்தில் பந்தின் வேகத்துக்குத் தகுந்தபடி ஆடுவது நல்ல பழக்கத்தில் இருந்தால்தான் முடியும். அப்படியிருந்தும் நாங்கள் ஆசிய கூடைப் பந்தாட்டப் போட்டியில் ஆறாவது இடத்தைப் பெற்றோம்! ஈரானோடு ஆடும் போது கடைசிவரை போராடி வெற்றியைச் சிறிய எண்ணிக்கையில் பறி கொடுத்தோம்!''

''சர்வதேசப் போட்டிகளில் நம் இந்தியக் கோஷ்டி சோபிக்கத் தேவைப்படுவது....?''

''நம் இந்தியக் கோஷ்டியினரிடம் நல்ல ஆட்டத் திறமை இருக்கிறது. சர்வ தேசப் போட்டிகளில் காணப்படுவது போன்ற இன்டோர் மர மைதானங்கள் இங்கும் தேவை. அப்போதுதான் சரியானபடி பயிற்சி பெற முடியும். அயல்நாட்டு நிபுணர்களின் பயிற்சியும் தேவை'' என்றார் மன்மோகன்.



''தனி மரம் தோப்பாகாது. எங்கள் சர்வீஸஸ் கோஷ்டியில் நன்கு இணைந்து ஆடும் ஆட்டக்காரர்கள் இருக்கிறார்கள்'' என்று பெருமையுடன் கூறினார் 'கோச்' ராஜன்.

□ இந்தக் கூடைப் பந்தாட்டப் போட்டிக்கு ஆசியாவிலேயே உயரமான மனிதர் (7' 3'') வந்து அதிசயிக்க வைத்தார். டாட்டா எஞ்சினியரிங் தொழிற்சாலையில் மின்சார இஞ்சினீயராகப் பணியாற்றும் பிரதீப் ஸ்ரீவத்ஸவா ''நான்தான் உலகிலேயே உயரமான இன்ஜினீயராக இருப்பேன்!'' என்றார் பெருமிதத்துடன். பலரது கண் பட்டுவிட்டதாலோ என்னவோ பீஹார் கோஷ்டிக்கு ஆட வந்த இந்த உயர்ந்த மனிதர் கூடைப் பந்தாட்டப் போட்டியில் சறுக்கி விழுந்து கையில் கட்டுடன் ஒரு மூலையில் அமரும்படி ஆயிற்று!

□ உயரமான மனிதர்கள்தாம் கூடைப் பந்தாட்டப் போட்டியில் சோபிக்க முடியும் என்றில்லை. குள்ளமான மகாராஷ்டிரச் சிறுவர்கள் பாய்ந்து சென்று தேசிய இளைஞர் சாம்பியன் பதவியைத் தில்லியிடமிருந்து இறுதி ஆட்டத்தில் 122—84 எண்ணிக்கையில் பறித்துக் கொண்டது 'குள்ளர்களுக்கும் காலமுண்டு' என்பதை நிரூபித்தது.

□ ஆண்களுக்குப் பெண்கள் சளைத்தவர்கள் இல்லை. புதுதில்லி பெண்கள் கோஷ்டி கர்நாடகத்தை இறுதி ஆட்டத்தில் வென்றது.

ஒரு வாரம் வெய்யிலிலும் மழையிலும் பகலிலும் இரவில் பிலிப்ஸ் ஸ்தாபனம் அமைத்த ஒளி விளக்கிலும் கூடைப் பந்தாட்டப் போட்டி விக்கினமின்றி நடந்து முடிந்தது. பாஸ்கெட் பால் ஸ்டார்கள் பலர் ஒளிவிட்டுப் பிரகாசித்தனர்; சிலர் ஒளி மங்கிப் போயினர். புதிய நட்சத்திரங்களும் உதயமாகியிருக்கின்றன. கூடை கூடையாகப் புகழ் சேரட்டும். குண்டுமணி

கூடைப் பந்தாட்ட வீரர்களின் அணிவகுப்பைப் பார்வையிடுகிறார் மேஜர் ஜெனரல் ராஜ்வாடே.





விண்ணும்
மண்ணும்
கி.ராஜேந்திரன்

# 1. நியூயார்க் பயணம்

'லைஸ்கோ ஸாரநாதன்' நாவலைப் படித்து முடித்துவிட்டு 'டப்'பென்று மூடினான் தனஞ்செயன். விமானத்தில் தன் ஆசனத்துக்கு முன்னாலிருந்த 'ஸீட்'டின் பின்புறப் பையில் புத்தகத்தைச் செருகினான்.

''ஒரே மூச்சில் படித்து முடித்துவிட்டாற்போலிருக்கிறதே! ரொம்ப சுவாரசியமாக இருந்ததோ?'' என்று கேட்டார் பக்கத்தில் இருந்தவர், ஆங்கிலத்தில்.

தனஞ்செயன் புன்னகை செய்தான். ''விருவிருப்பா யிருந்தது; தமாஷாகவும் இருந்தது.''

''நிறையப் படங்கள் இருந்தனவே, கவனித்தேன்.''

''அது புத்தகமல்ல; ஒரு வாரப் பத்திரிகையில் தொடர்ந்து வெளி வந்ததை அவ்வப்போது தனியே எடுத்துச் சேகரித்து வைத்துப் பைண்டு செய்தது. நான் புறப்படும்போது என் தங்கை கொடுத்து அனுப்பினாள். அவளுக்கு ரொம்பப் பிடித்திருந்ததாம்.''

'' என்ன மொழி அது?''

''தமிழ் — என் தாய் மொழி.''

''நினைத்தேன், ஏற்கெனவே இந்த எழுத்துக்களைப் பார்த்த மாதிரி இருக்கிறதே-என்று. மதுரைக் கோயில் தமிழ் நாட்டில் என்னை மிகவும் கவர்ந்த ஒன்று.''

''அதில் மனம் லயிக்காமலும் இருக்க முடியுமா என்ன?'' என்று கேட்டான் தனஞ்செயன்.

''எங்கள் நாட்டில் போக்குவரத்து வசதிகள், ஹோட்டல் வசதிகள் போதாது. மதுரையில் உள்ளவற்றைப் போல், ஏன் அவற்றைவிடச் சிறந்ததாகக்கூட அற்புதமான கலைவடிவங்கள் இன்னும் பல சிறிய சிறிய ஊர்களில் உள்ளன.''

''ஆமாம், ஆத்மீகத் துறையிலும், கலைத் துறையிலும் இந்தியா உலகின் முன்னணியில் இருப்பதாகவே கருதுகிறேன்.''

''மற்றத் துறைகளிலும் விரைவில் முன்னேறுவோம்.''

''அதில் எனக்குக் கொஞ்சம்கூடச் சந்தேகம் இல்லை. மக்களை நடத்திச் செல்லும் தலைமை, அவர்களின் உரிமைகளைக் காத்துக் கடமைகளை உணர்த்துவதாய் அமைந்து விட்டால் நோக்கங்கள் எளிதில் கைகூடி விடும்.''

''அங்கேதான் கொஞ்சம் சங்கடம்!''



''அதை நான் சொல்லக் கூடாது ; நான் அந்நியன்.''

''நானும் அதிகமாய்ப் பேசக்கூடாது, நான் இந்தியன் !''

அவர் சிரித்தார். ''உங்களை எனக்குப் பிடிக்கிறது. பிரிட்டனில் எத்தனை நாட்கள் தங்குவீர்கள் ?''

''ஸாரி, நான் நியூயார்க் செல் [illegible]ன் !''

''ஓ, அப்படியானால் லண்டனில் உங்களுக்கு 'குட் பை' சொல்ல வேண்டியதுதான் நான் !''

தனஞ்செயன் இதற்குப் பதில் கூறாது காலடியில் இருந்த கைப் பெட்டியை எடுத்துத் திறந்தான். வழக்கமான 'பிரீப் கே'ஸைவிடச் சிறிது பெரிதாயிருந்தது. அதனுள் ஒரு டவல், ஒரு ஷேவிங் ஸெட், சில அறிமுகக் கடிதங்கள், விலாசங்கள் அடங்கிய சிறிய நோட்டுப் புத்தகம் இத்தியாதி இருந்தன. கோட்டை அணிந்து விமானத்தைவிட்டு இறங்கும்போது பர்ஸ், பாஸ்போர்ட் இரண்டையும் இதிலிருந்து எடுத்துக் கோட்டின் உள் பையில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று மானசீகக் குறிப்பு போட்டபடியே எதிரே செருகி வைத்திருந்த புத்தகத்தை எடுத்துப் பெட்டியில் வைத்தான்.

பிறகு பெட்டியை இரண்டாகப் பிரித்த, 'ரெக்ஸைன்' ஒட்டப்பட்ட ஓர் அட்டையைத் தூக்கினான். ஷேவிங் டவல் முதலியன மேலே, மூடிப் பக்கம் போய் விடக் கீழே பெட்டியின் அடிவாரத்தில் பல ரக எஃகுக் கம்பிகள், குழாய்கள் இருந்தன. மூன்றங்குல நீளம் முதல் ஓரடி நீளம் வரை பலவித அளவினதாய் இருந்த அவை, ஆடாமல் கலையாமல் இருக்க எலாஸ்டிக் கயிறுகளுள் கட்டுண்டிருந்தன.

''மாதிரி காட்ட எடுத்துப் போகிறீர்களா ?'' என்றார் பக்கத்தில் இருந்தவர்.

''ம்... இந்தியாவில் தயாராகும் பல ரக விசேஷ உலோகக் கலவைகள் கொண்ட எஃகுக் கம்பிகள், குழாய்கள், தகடுகள். இந்தியா பல துறைகளிலும் முன்னேறி வருவதற்கு ஓர் எடுத்துக்காட்டு. எஸ்.டி.ஸி. அதாவது ஸ்டேட் டிரேடிங் கார்ப்பொரேஷன் மூலம் இவை ஏற்றுமதியாகும். ஆர்டர்கள் பிடிக்கத்தான் அமெரிக்கா போகிறேன். எந்த வடிவத்திலும் அளவிலும் அவர்கள் குறிப்பிடுகிற எந்தவிதமான ரசாயனச் சேர்க்கையிலும் தயாரித்தளிக்க முடியும் என்று உணர்த்த வேண்டாமா? இவற்றில் ஒன்றிரண்டைப் பரிசோதனைகளுக்கு உட்படுத்தினால் திருப்தி அடைவார்கள்.''

''உங்களுக்கு வெற்றி கிட்ட வாழ்த்துகிறேன்.''

வந்தனம் கூறிய தனஞ்செயன் பெட்டியை மூடி மீண்டும் காலடியில்



வைத்துக் கொண்டான். ஆசனத்தைப் பின்னால் சாய்த்துக் கண்களை மூடினான். பக்கத்திலிருந்த வில்ஸன் தன்னை முழுமையாக நம்பினார் என்பதில் அவனுக்குச் சந்தேகமே ஏற்படவில்லை. அவர் கேள்வி கேட்டுப் பேச்சுக் கொடுத்ததெல்லாம் ஒரு பிரயாணி சக பிரயாணியிடம் போகிற போக்கில் காட்டுகிற இலேசான அக்கறைக்கு அதிகமாக ஏதொன்றுமில்லை என்று தீர்மானித்து நிம்மதியாகத் தூங்கத் தொடங்கினான். 'நைட் கேப்'பாக அவன் அருந்தியிருந்த விஸ்கி (ஆன் தி ராக்ஸ்) வேலை செய்யத் தொடங்கி விட்டது.

* * *

நியூயார்க். வியாபாரத் துறையில் தனக்கு இருக்கும் சாமர்த்தியத்தை நினைத்துத் தனஞ்செயனே வியந்து கொண்டிருந்தான். மூன்று நாட்களுக்குள் தன்னால் சில லட்ச ரூபாய்களுக்கு ஆர்டர்கள் பிடிக்க முடியும் என்று அவன் எதிர்பார்க்கவேயில்லை. குபேர நாடு என்றால் இதுதான். பிடித்துப் போய்விட்டதானால் எத்தனை அலட்சியமாகக் கையெழுத்துப் போட்டுவிட்டுக் கைகுலுக்குகிறார்கள்!

மகராஜன் பானர்ஜி நன்றாயிருக்க வேணும். எஸ்.டி.ஸி.யின் எஃகு வர்த்தகப் பிரிவிலிருந்து ரிடையர் ஆனவன். ஒரு மாதம் அவனிடம் இத்துறையில் பயிற்சி பெற்றபோது பரீட்சைக்குப் படிப்பதுபோல் ஒரே 'போரா'கத்தான் இருந்தது. ஆனால் இங்கே அது எப்படிக் கைகொடுத்து உதவியது! இல்லாத போனால் இவர்கள் கேட்ட குறுக்குக் கேள்விகளுக்கெல்லாம் தன்னால் பளிச் சென்று பதில் சொல்லியிருக்க முடியுமா? தன்னிடத்திலும் தான் விற்பனை செய்ய வந்துள்ள பொருளிடத்திலும் அவர்களுக்கு மதிப்பு ஏற்படச் செய்திருக்க முடியுமா?

அதோடு பேச்சுத் திறனும் வேண்டும். கொடுக்கப்பட்டிருந்த விலாசங்களுக்குச் சென்று, பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து, முதலில் ஒரு பிஸினஸ் லஞ்ச் அபாய்ண்ட்மெண்ட் கேட்க வேண்டும். இரண்டு டிரிங்க்ஸ், ('போதும் நிறுத்து, மத்தியானம் வேலை செய்ய வேண்டும்!') த்ரீ கோர்ஸ் லஞ்ச். சாப்பாட்டினிடையே இலேசாகக் குடும்ப விவகாரங்கள்; ஓரளவு அமெரிக்க அரசியல்; பிறகு முன்னேற்றம் அடைந்து வரும் நாடுகளுக்கு அமெரிக்கா போன்ற முன்னணி நாடுகள் உதவ வேண்டியதன் அவசியம். அதிகமாக இதற்கு அழுத்தம் தராமல் மேலே பேச வேண்டியது: ''ஆனால் என்னைப் பொறுத்த வரையில் தகுதியிருந்தால் எனக்கு உதவுங்கள் போதும். போனால் போகட்டும், ஐயோ பாவம் என்று பரிதாபப்பட்டு ஆர்டர்கள் தர வேண்டாம்!''

''ரொம்ப சரி. நாளை வாருங்கள். பர்ச்சேஸிங் ஸெக்ஷன் ஸ்டீவன்ஸிடம் சொல்லி வைக்கிறேன்.''

''நன்றி! நீங்கள் சொன்னால் காரியம் முடிந்தாற் போலத்தான். எனக்கு உங்கள் நல்லெண்ணத்திலும் எங்கள் தகுதியிலும் நம்பிக்கை இருக்கிறது.''

இப்படியும் இன்னும் பலவாறாகவும் பேசிச் சாதித்துள்ளதை நினைத்தபோது தவறான துறையில் தான் மாட்டிக் கொண்டிருப்பதாகத் தனஞ்செயனுக்குச் சந்தேகம் வந்து விட்டது. வர்த்தகத் துறையில் நிஜமாகவே இறங்கியிருந்தால் இதற்குள் நாலு வீடுகள் கட்டியிருக்கலாமோ?

இப்போது தான் பிடித்துள்ள ஆர்டர்களுக்கு உரிய கமிஷனைக் கேட்டுப் பார்த்தால் என்ன? 'பாஸ்' என்ன



அவள்
எழிலின் ரகசியம்
# ஐடெக்ஸ்
## அழகு சாதனங்கள்

முப்பது வருடங்களாக
பிரசித்திபெற்ற நம்பகமான
தயாரிப்புகள்




**Aravind Laboratories**
MADRAS-33

AL-1

மலேசியா ஏஜண்டு: ஓரியண்டல் ஏஜன்ஸிஸ், 31, மார்க்கெட் ஸ்டிரீட், பினாங்கு

---

## அறுவை சிகிச்சை இன்றியே மூலத்தை சுருக்க




**நமைச்சலை நிறுத்துகிறது;**
**நிமிடங்களில் வலியைப் போக்குகிறது.**

சிக்கனமான 50 கிராம், மற்றும் 30 கிராம் ட்யூப்களில் அப்ளிகேட்டருடன், எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது.

**பிரிபரேஷன் எச்***

*Regd. User of TM: Geoffrey Manners & Co. Ltd.

115 PH-SIR Tml

---



# கோகுலம்

(மாதம் இருமுறை)

தனிப் பிரதி 40 காசு

சந்தா விவரம்:

உள் நாடு:
ஆண்டுச் சந்தா: ரூ. 10/-
ஆறு மாதம்: ரூ. 5/-

இலங்கை:
ஆண்டுச் சந்தா: ரூ. 15/-
(இலங்கை நாணயப்படி)

இதர நாடுகள்:
ஆண்டுச் சந்தா: ரூ. 25/-

o

மானேஜர், 'கோகுலம்'
கல்விப் பூங்கா, சென்னை-600031

சொல்லுவாரோ? அமெரிக்காவுக்கு நான் வந்ததன் உண்மையான காரணம் வேறாக இருந்தாலும் எஸ்.டி.ஸி. இந்த ஆர்டர்களுக்குச் சப்ளை பண்ணுமலா இருக்கப் போகிறது? ''கமிஷனைக் கொடுத்ததாய்க் கணக்கெழுதாமலா விடுவார்கள்? வேறு எவனாவது அதைப் பாக்கெட்டில் போட்டுக் கொள்ள அநுமதிப்பானேன்? என் சார்பில் நீங்கள் கேட்டுப் பெற்றுத் தந்துவிடலாமே?''—இந்தத் தர்க்க வாதத்துக்குப் 'பாஸ்' சம்மதித்துத்தான் ஆக வேண்டும்....

குளியல் பெட்டிக்குள் இன்னும் நன்றாக அமுங்கிக் கழுத்து வரை கதகதப்பான நீர் உயர்ந்து நிற்கத்தலையை விளிம்பில் சாய்த்துக் கண்களை மூடிக் கொண்டான் தனஞ்செயன். அப்பாடா! என்ன சுகம்! இம்மாதிரியான வசதிகளைச் சந்தர்ப்பம் கிடைக்கும்போது நன்கு பயன்படுத்திக் கொண்டால்தான் உண்டு. இந்தியாவில் அவன் ஹில்டனையோ ஷெரடனையோ நினைத்துப் பார்க்கக்கூட முடியுமா என்ன? குளியல் தொட்டி, குறைவின்றி வெந்நீர், தடிமனான புசுபுசு டவல், லாவண்டர் சோப், பளபளக்கும் பெல்ஜியன் நிலைக் கண்ணாடி, பாத்மேட். பக்கத்து பெட்ரூமில் ஸ்பிரிங் கட்டிலில் டன்லப் பில்லோ, தினம் மாற்றப்படும் தூய பெட்ஷீட்டுகள், போர்த்திக் கொள்ள ரஜாய் மெத்தை, வழுவழுப்பான டிரெஸ்ஸிங் டேபிள், விசாலமான பிக்சர் விண்டோ வழியே நியூயார்க் காட்சி, கனமான திரைச் சீலைகள், ஸெண்ட்ரல் ஹீட்டிங், டேபிள் லாம்ப், டெலிவிஷன், ரேடியோ—எல்லாவற்றையும் எக்ஸ்பென்ஸ் அக்கவுண்டில் அனுபவித்தால்தான் சுகம்! இந்தியாவில் இருக்கும்போது உட்லண்ட்ஸில் தங்கும் அளவு டி. ஏ. கிடைத்தாலும் உடுப்பியில்தான் தங்கச் சொல்லும். தங்கை ஒருத்தி கல்யாணத்துக்கு இருக்கிறாளே!

''அமெரிக்காவிலிருந்து நீ எனக்கு என்ன வாங்கி வருவே அண்ணா?'' என்று பச்சைக் குழந்தை மாதிரி அவள் கேட்டதை நினைத்துப் பார்த்தான் தனஞ்செயன்.

''உனக்கு என்ன வேணும்?''

''எது சௌகரியப்படுமோ அது. ஆனால் அமெரிக்காவிலிருந்து உனக்காகக் கொண்டு வந்தேன் என்று ஒரு மன்னியைப் பின்னோடு இழுத்துக்கிட்டு வந்து சேராதே!''

குடும்பத்தினர் எல்லோரும் சேர்ந்து கொல்லென்று சிரித்தது பாலம் விமான நிலையத்தை அதிர வைத்தது. ஏராளமான தலைகள் திரும்பிப் பார்த்தன. இப்போது அதை நினைத்துக் கொண்டு சிரித்தான் தனஞ்செயன். 'மன்னியை இழுத்துக்கிட்டு வராதே' என்றபோது அவள் ஓர் அமெரிக்க யுவதியைத்தான் மனத்தில் எண்ணிப் பேசியிருக்கிறாள். ஆனால் அமெரிக்காவிலிருந்து தான் அழைத்துச் செல்பவள் ஓர் இந்தியப் பெண்ணாக இருக்கக் கூடுமானால் சாந்தி அவளை மன்னியாக ஏற்பாளா? அல்லது அவள் தமிழ் நாட்டவளாகவும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பாளா?

அவன் மனம் இயல்பாக அனுபமாவின்பால் திரும்பியது. அவளை இன்னும் ஒரு முறைகூடச் சந்திக்கவோ, பேசவோ இல்லை. அதற்குள் அவளைச் சாந்தியின் மன்னியாக்குவது பற்றிச் சிந்திக்க ஆரம்பித்துவிட்டேனே! கடந்த ஒன்றரை மாதங்களுக்கு மேலாகவே அவன் விசேஷ உலோகக் கலவை கொண்ட எஃகுத் தயாரிப்பு—வாணிபம் பற்றிய பல விஷயங்களைக் கரைத்துக் குடித்ததுடன் அனுபமாவைப் பற்றிக் கிடைக்கப் பெற்ற சகல விவரங்களையும் மிக உன்னிப்பாக நோக்கி ஆராய்ந்து அறிந்திருந்தான். ஆயினும் இதுவரை உதிக்காத எண்ணம் — சாந்திக்கு அனுபமாவை மன்னியாக்கும் யோசனை — அவளை இப்போது நேரில் பார்க்கிற தருணம் நெருங்கும்போது தோன்றியதானது தனஞ்செயனுக்கு விநோதமாயும் முற்றிலும் புதுமையான ஓர் உணர்வாயும் இருந்தது.

## 2. அனுபமா பற்றிய அறிக்கை

தனஞ்செயன் கண்ணாடி எதிரே அண்டர்வேரோடு நின்றான். ஹிப்பி பாணியில் கேசம் வளர்த்தபோது ஆரம்பத்தில் தலை கனத்தது. தும்மல்கள் தொடர்ந்தன. ஃபாஷனை முன்னிட்டு அந்த 'அலர்ஜி'யுடன் போராடி வெற்றி கண்டிருந்தான். உதடுகளுக்குக் கீழே இருபுறமும் இறங்கியிருந்த தடிமனான மீசையிலும் தூண்களாக உயர்ந்திருந்த ஸைட் பர்ன்ஸிலும் படாமல் எலெக்ட்ரிக் ஷேவரை மிருதியாக உள்ள மிகக் குறைந்த பிரதேசத்தில் ஓடவிடுவது சிரமமாக இருந்தது. மேலும் அதன் சத்தம் ரேடியோவில் ஒலித்த 'ஸவுத் ஆஃப் தி பார்டர்' இசையை அமுக்கியது. அவனுக்குப் பிடித்த

ரிகார்டு. அவனுக்குப் பிடிக்காத இடையூறு. முகம் சுளித்தான். உள்ளத்தைத் துள்ள வைக்கும் இனிய வாத்திய இசை. பாப் மியூஸிக் என்று சொல்லிக் கொண்டு யாராவது பாட ஆரம்பித்தால்தான் அவனுக்குக் காதில் பஞ்சை அடைத்துக் கொள்ளலாம் என்று தோன்றும்.

ஆயில் ஆஃப் விண்டர் கிரீன் மணம் எழுந்தது. ஆஃப்டர் ஷேவ் லோஷன். இனி அணிய வேண்டிய உடுப்பைத் தேர்ந்தெடுக்கலாம். பிஸினஸ் ஸூட் வேண்டாம். ஹாலிடே மூடைப் பிரதிபலிப்பதாய் க்ரே ஃப்ளானல் பாண்ட். லைட் கிரீன் ஷர்ட். சிறு கட்டங்கள் போட்ட ப்ரௌன் ஸ்போர்ட்ஸ் கோட். டை? இல்லாத போனாலும் பாதகமில்லை. அணிவதானால் ரொம்ப ரொம்ப அகலமாக ஏராளமான டிசைன்களுடன் கூடியதாய் இருக்க வேண்டும்.

இன்று முழுவதும் ஸைட் ஸியிங்குக்கு ஒதுக்கிவிடலாம். பண்ணின பிஸினஸ் போதும் (கண் துடைப்புக்கு இதைவிட என்ன?) எங்கே போவது? எம்பயர் ஸ்டேட் பில்டிங், மியூஸியம் ஆஃப் மாடர்ன் ஆர்ட். இது போதும். பிக்காஸோவை அனுபவிப்பது என்று ஆரம்பித்தாலே மணிக் கணக்கில் ஆகுமே. நியூயார்க்கில் பார்க்க வேண்டியன எல்லாவற்றையும் பார்க்காவிட்டாலும் பரவாயில்லை. பரபரப்புடன் எல்லாவற்றையும் கண்களால் கபளீகரம் பண்ணுவது என்று ஆரம்பித்தால் சுற்றுலா உலாவாயிராது; உழைப்பாகிவிடும்.

மாலையில் அனுபமாவைச் சந்தித்து விட வேண்டும் கண்டிப்பாக. தவறினால் நாளையும் மறுநாளும் வீக்கெண்ட் விடுமுறை; காரியாலயத்துக்கு வர மாட்டாள். வீட்டு விலாசம் இருந்தாலும் எடுத்த எடுப்பில் அங்கே போய்க் கதவைத் தட்டுவது உசிதம் இல்லை. அவள் தனக்குள்ளேயே சுருண்டு கொள்வாள். யதேச்சையாகச் சந்தித்து நட்பை வளர்த்துக் கொள்வது போல் தோன்ற வேண்டும். அதற்கு அவள் ஆபீஸை விட்டு வெளியே வரும்போது கவனித்துப் பின்தொடருவதுதான் சிறந்த வழி. உரையாடும் சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொண்டு அவளை எடை போட வேண்டும். இரு தரப்பிலும் நம்பிக்கை உருவாகிய பிறகு மெல்ல விஷயத்தை வெளியிட வேண்டும்.

அவளிடம் நம்பிக்கை விழாமல் இருக்கக் காரணமில்லை. துப்பறியும் நிறுவனமான கோல்மன் அண்டு பீட்டர் கொடுத்த நூறு பக்க ரிப்போர்ட் அவளைப் பற்றிய மிக அனுகூலமான முடிவுகளுக்கு வரவே அனுசரணையாக இருந்தது. இந்திய தூதராலயம் அந்த நிறுவனத்துக்குத் தந்த ஐந்நூறு டாலர்கள் வீண் போகவில்லை. எம காதகப் பேர்வழிகள், பிறப்பு, குழந்தைப் பருவம், டீன் ஏஜ், இன்றைய நிலை என்று பகுதி பகுதியாக எத்தனை விரிவாக அவளைப் பற்றிய தகவல்களைச் சேகரித்து அனுப்பியிருந்தார்கள்! நூற்றுக்கு மேற்பட்ட 12 × 10 புகைப் படங்கள்; ஐம்பத்திரண்டு வண்ண ஸ்லைடுகள். வீட்டைவிட்டு வெளியே வருவது, அம்மாவுக்கு டாட்டா சொல்லிவிட்டு அப்பாவுடன் நடப்பது, ஸபர்பன் ரயிலில் ஏறி நியூயார்க் நகரின் மையத்தில் வந்து இறங்குவது, பிறகு தந்தையும் மகளும் பிரிந்து வெவ்வேறு திசைகளில் தங்கள் அலுவலகங்களுக்குச் செல்வது (வீடு திரும்பும்போது ஒன்றாகச் சேர்ந்து வருவதில்லை), சனி ஞாயிறு வாராந்திர விடுமுறைகளில் வீட்டில் தோட்ட வேலை செய்வது, தம்பி தங்கைகளுடன் விளையாடுவது, காரில் குடும்பம் பிக்னிக் போவது என்று எதையும் விட்டு வைக்காமல் படமெடுத்து அனுப்பியிருந்தார்கள். எத்தனை விதமான புகைப்படங்களை டெலிலென்ஸ் பயன்படுத்தி யாரும் அறியாதவாறு எடுத்து விட்டிருக்கிறார்கள்! ஸ்விம்மிங்பூல் அருகே பிக்னியில்கூட அவளை ஐந்நூறு வண்ணப் படங்கள் எடுத்திருந்தார்கள்! நல்ல வேளை! வீட்டில் குளிக்கும்போதோ உடை மாற்றும் போதோ படம் எடுக்காமல் விட்டார்களே! ஆனால் அவர்களை நொந்து என்ன பயன்? சாவித் துவாரத்தின் வழியே வளைந்து கொடுக்கக் கூடிய பெரிஸ்கோப்பிக் குழலை நுழைத்துக் காமிரா லென்ஸில் மறு முனையைப் பொருத்தி, மூடிய கதவுக்குப் பின்னால் நடப்பனவற்றைக்கூடப் படம் பிடிக்கும் காலம் இது. இருட்டில்கூட இன்ஃப்ரா ரெட் காமிராவைப் பயன்படுத்திப் படம் எடுக்கலாம். ஆக மொத்தம் அனுபமாவைப் பற்றிச் சகல விவரங்களும் தேவை என்று பொறுப்பை அமெரிக்க டிடெக்டிவ் ஏஜென்ஸியிடம் ஒப்படைத்த பின் பாரதப் பண்பு பறி போய்விட்டதாகப் புலம்பவா முடியும்?

அவள் உருவம் அவன் மனத்தில் நன்றாகப் பதிந்துவிட்ட ஒன்று. ஜெயலலிதாவோ அல்லது டிம்பிள் கபாடியாவோ எப்படித் தோற்றமளிப்பாள் என்பதைக்கூட அவன் மறந்து போய்விடலாம். ஆனால் அனுபமாவின்

முகம் மட்டுமல்ல, அவள் உடலின் ஒவ்வொரு பகுதியும் தனித்தனியாகவும் மொத்தமாகவும் — அவன் கண்களை மூடியிருந்தாலும் திறந்திருந்தாலும் — நினைத்த நேரத்தில் எதிரே வந்து நிற்கும். புகைப்படங்களில் முழு உருவத்தையும் க்ளோஸ் அப் ஆக முகத்தையும் அடிக்கடி கண்டும் கலர் ஸ்லைடுகளைத் திரையில் போட்டுப் பார்த்தும் அவன் அவளுக்கு மிகவும் நெருங்கியவனாகி விட்டான்.

அவன் மனத்தை உறுத்திய விஷயம் ஒன்றே ஒன்றுதான். மைக் டேவிஸுடன் அவளுக்கு இருந்த தொடர்பு. பல புகைப்படங்களில் அவனும் இடம் பெற்றிருந்தான் — நெருக்கமாக. வாரத்தில் மூன்று நாட்களாவது டேட்டிங். அலுவலகத்திலிருந்து வெளியே வந்ததும் சினிமா, பூங்கா, நீச்சல் குளம், நைட் கிளப் என்று எங்கேயாவது மாறி மாறிப் போகிறார்கள். அனுபமாவின் பெற்றோர்களுக்குத் தெரிந்திருந்தது. ஆட்சேபணை ஏதும் கூறவில்லை. ஒரு வங்காளி, தமிழகப் பெண்ணை மணந்து அமெரிக்காவில் குடியேறிக் குழந்தைகளைப் பெற்றுச் சந்தோஷமாக வாழ முடியுமானால் அந்தத் தம்பதியின் பெண் ஓர் அமெரிக்கனுடன் அந்த நாட்டுப் பாணியிலேயே பழகி, புரிந்து கொண்டு காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டு மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை ஏன் நடத்தக் கூடாது என்று எண்ணினார்கள் போலும்.

மைக்குக்கு அவளிடம் அளப்பரிய காதல் என்று உறுதியாகக் கூறியது கோல்மன் அண்டு பீட்டர் நிறுவனம் சமர்ப்பித்த ரிப்போர்ட். ஆனால் அவளுக்கு அவனிடம் உள்ள நட்பு காதலாக மலர்ந்திருக்கிறதா இல்லையா என்பதை அவர்களால் அனுமானிக்க முடியவில்லை. நிச்சயமாக அவர்களிடையே உடலுறவு இல்லை என்றும் குறிப்பிட்டிருந்தார்கள். காதல் வேறு, உடலுறவு வேறு என்ற நிலை இன்று அமெரிக்காவில் பரவலாக ஒப்புக் கொள்ளப்பட்டுவிட்ட விஷயமாகி விட்டதால் அவர்களது இந்தக் கணிப்பில் அதிர்ச்சி அடையவோ அதிசயப்படவோ ஏதுமில்லை. இருந்தாலும் அறிக்கையின் இந்தப் பகுதி தனஞ்செயனின் உள்ளத்தைக் குடைந்தது. மைக் டேவிஸ், தன் காரியம் சுலபமாக முடிய இடையூறாக இருப்பான் என்று நினைத்தான். ஆனால் அதே சமயம் அனுபமாவைத் தன் வசப்படுத்தச் சாதகமான குறிப்புக்கள் இரண்டும் அந்த அறிக்கையில் இருந்தன என்பதை அவன் மறந்து விடவில்லை.

அமெரிக்காவிலேயே அவள் பிறந்து வளர்ந்து, படித்துப் பட்டம் பெற்று, உத்தியோகம் பார்த்தாலும் தாய் மொழி தந்தை மொழி இரண்டையும் அவள் பெற்றோரிடம் மிகுந்த கருத்தோடு பயின்றிருந்தாள். ஆக அவள் ஒரு விண்வெளி விஞ்ஞானி என்பதோடு மும்மொழிப் புலமையும் உடையவள். இன்னொன்று: இந்தியாவில் குஷ்டரோக நிவாரணத்துக்கென்று பாடுபடுகிற ஒரு மிஷனரிக்கு அமெரிக்காவில் அவள் பணம் சேகரித்து மாதம் ஐம்பது டாலர்களுக்குக் குறையாமல் அனுப்பிக் கொண்டிருந்தாள். குறைந்தபட்சம் மாதம் ஐம்பது டாலர் அனுப்புவது என்று அவள் சங்கல்பித்துக் கொண்டு வசூலாகும் தொகை அதற்குக் குறைந்தால் தன் கையைவிட்டுக் கொடுத்து ஈடு செய்து வந்தாள். இவை அவள் அமெரிக்கப் பிரஜையே ஆனாலும் இந்தியாவிடம் பெருமளவுக்கு இதயத்தைப் பறி கொடுத்திருந்தாள் என்பதை வெட்டவெளிச்சமாக்கின.

துப்பறியும் நிறுவனம் சமர்ப்பித்த அறிக்கையில் அவளுடைய ஆராய்ச்சிகளின் தன்மை எத்தகையது என்பது பற்றிய விவரம் ஏதுமில்லை. அதை அவர்கள் கண்டுபிடிப்பது சாத்தியமும் இல்லை. அவளும் மைக் டேவிஸும் தேசிய விண்வெளி நிர்வாக நிறுவனத்துக்காக (NASA) ஏதோ முக்கியமானதும் இரகசியமானதுமான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதற்கு அதிகமாக அவர்களால் ஏதும் தெரிந்து கொள்ளமுடியவில்லை. அந்த விவரங்கள் அமெரிக்க அரசுக்கும் அதன் ஓர் அங்கமான நாஸாவுக்கும் மட்டுமே தெரிந்திருக்க முடியும். அதன் பாதுகாப்புக்களை அத்தனை சுலபமாக உடைத்தெறிந்து ஊடுருவி நோக்க முடியுமானால் அமெரிக்கா ஒரு வல்லரசாகத் திகழ்வதெங்கே?

ஆயினும் அனுபமா பெற்றுள்ள டாக்டர் பட்டங்களும் அடைந்துள்ள கௌரவங்களும் இரகசியங்கள் அல்ல. ஏதேனும் ஒரு விதத்தில் அவளுடன் தொடர்பு கொள்ள நேர்ந்த பிற அமெரிக்க விஞ்ஞானிகள் ஒன்று அவளை மதித்து மனம்விட்டுப் போற்றினார்கள், அல்லது பொறாமைப்பட்டார்கள்.

ஆகக்கூடி ஒரு முதல்தரமான விஞ்ஞானியைத்தான் இந்தியாவுக்குத் தன்னுடன் வருமாறு வற்புறுத்தப் போகிறோம் என்பதில் தனஞ்செயனுக்குச் சந்தேகம் எள்ளளவுமில்லை. தன் முயற்சி வெற்றி பெறுமா என்பதில் தான் ஓரளவு சந்தேகம்! (தொடரும்)


சதீஷ்குமார்

# ஆசைகள் மடிவதில்லை

கதை: **கௌசிகன்**

சித்திரம்: **சூர்யா..**


மல்லிகா

**தருமராஜன்:** ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரின் மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய பெரிய மனிதர். அச்சமூகத்தினரின் பல கோடி ரூபாய்கள் மதிப்புடைய அறக் கட்டளையை நிர்வகிக்கும் பொறுப்பாளர். இவரே பெரும் செல்வந்தர். இவரது எந்த ஒரு முடிவுக்கும் அந்தச் சமூகத்தினர் மறுத்துக் கூறவே மாட்டார்கள். அந்த அறக் கட்டளை அமைப்பின் நிர்வாகத்தில் அங்கம் வகிக்கும் வாய்ப்புப் பெற்றவனின் வாழ்வு வளமடையும். அத்தனைக்குப் பணப் புழக்கமுடைய அமைப்பு அது. ஆனால் தருமராஜனோ பெயருக்கேற்பத் தர்மத்தின் வழி நடக்கும் பண்பாளர்.

**மேனகா:** தருமராஜனின் மனைவி. அழகி. அதைப் போலவே ஆபத்தானவள். நாகரிக மோகத்தில் மூழ்கிச் செல்வத்தின் தீமைகளையெல்லாம் தனதாக்கிக் கொண்டவள். 'சோஷியல்' என்று கூறி இஷ்டப்படி வாழ்ந்துகணவனின் வெறுப்புக்குஆளானவள்.

**நந்தகோபால்** — பப்ளிக் பிராசிகியூடர். அதே சமூகத்தினரில் உயர் பதவி வகிக்கும் ஒரே நபர். பொதுமக்களின் மதிப்புக்குப் பாத்திரமானவர். நீதிபதி பதவியை எதிர் பார்ப்பவர்.

**வேணுகோபால்** - புகழ்பெற்ற லாயர். தருமராஜனின் பொறுப்பிலுள்ள அறக் கட்டளை அமைப்பில் காலியாக உள்ள ஒரு முக்கிய பதவி தமக்குக் கிடைக்க வேண்டும் என்று நினைப்பவர்.

**மல்லிகா** — தருமராஜனைக் கொன்றதாகக் கொலைக் குற்றம் சுமத்தப்பட்டு மரண தண்டனை பெற்றவள். உழைக்கும் பெண்களுக்கான ஹாஸ்டலில் தங்கிக் கொண்டு தருமராஜனின் அந்தரங்கக் காரியதரிசியாகப் பணியாற்றிய படித்த பெண். கண்ணியம் மிக்க இவனோடு தகாத உறவு கொண்டிருப்பதாக மேனகா தன் கணவனைக் குற்றம் சாட்டினாள்.

**சதீஷ்குமார்** — புகழ்பெற்ற லாயர். பப்ளிக் பிராசிகியூடரின் முதல் உதவியாளர். விரைவில் பப்ளிக் பிராசிகியூடராகக் கூடிய வாய்ப்பு உள்ளவர். மல்லிகாவைக் குற்றவாளியாக்கி இவருடைய மேலாளர் வாதிட்டு வெற்றி கண்டாலும் பிறகு ஏதோ ஒரு சக்தியால் உந்தப்பட்டு அவளை விடுவிக்கப் பெருமுயற்சி எடுக்கிறார்.

**முரளி** — உழைக்கும் பத்திரிகையாளர் வர்க்கத்தைச் சேர்ந்த ஓர் எழுத்தாளன். சதீஷின் கல்லூரித் தோழன். அவன் புகழ் மிக்க லாயரானபோது இவன் புகழ்மிக்க பத்திரிகை நிருபராகவும் எழுத்தாளனாகவும் விளங்கினான். சதீஷின் நட்புக்கும் அன்புக்கும் பாத்திரமானவன்.

**கலியபெருமாள் - மாரிமுத்து** — அரசியல் உலகில் முக்கிய புள்ளிகள். சமூகத்தில் பெரும் பதவிகளை விரும்புவோர் இவர்களுடைய தயவை நாடியே தீரவேண்டும். அத்தனை செல்வாக்கு. அந்தச் செல்வாக்கைத் தங்களுக்குச் செல்வமாக மாற்றிக் கொள்ளும் திறமைசாலிகளும்கூட.

இக்கதையின் முக்கிய பாத்திரங்கள் இவர்கள்தாம். இனி நீங்கள் சம்பவங்களுக்குள் நுழையலாம்.




... ஆகவே, மல்லிகாதான் தர்மராஜனைக் கொன்றிருக்கிறாள் என்பதை உறுதிப் படுத்தி, குற்றவாளிக்கு மரண தண்டனை விதிக்கிறேன். தண்டனை இன்றிலிருந்து ஏழாவது நாள் நிறைவேற்றப் பட வேண்டும். இத்துடன் நீதி மன்றம் கலைகிறது.


நந்தகோபால், கன்கிராட்ஸ். வழக்கை உன் பக்கம் வெற்றியாக்கிக் கொண்டாய்.
சட்ட நுணுக்கமுள்ள நந்தகோபாலோட வாதத் திறமை தானே அவரைப் பப்ளிக் ப்ராசிகியூட ராக்கி இருக்கிறது.


விசாரணை முழுவதும் கவனித்து வந்த பத்திரிகை நிருபரான முரளியின் உள்ளத்தில் ஒரு போராட்டம்.
மல்லிகா கொலை காரியா? அவளு டைய அந்த முகம், பார்வை... —ஐயோ, நான் நிரபராதி! —என்று கதறிய போது...ம். ஏன் அவள் நிரபராதியாக இருக்கக் கூடாது?


பரிதாபத்தினால் மட்டும் நான் இப்படி நினைக்கவில்லை. மல்லிகாவிற்காக வாதாடிய வேணுகோபால் தம் கட மையைச் சரிவரச் செய்தாரா? இதில் எங்கோ மர்மம் இருக்கிறது. உண்மை மறைக்கப் பட்டிருக்கிறது. எங்கே, எப்படி?... கொலை நடந்த அன்றைய நிகழ்ச்சியை மறுபடி நினைவுக்குக் கொண்டு வந்து பார்த்தால்.... ஒரு வேளை....


..அன்று— இரவு பத்து மணி தரும ராஜன் வீட்டிற்கு வருகிறார். அவரை வரவேற்க மனைவி மேனகா இல்லை. சமையற்காரன்...
அம்மா எங்கேடா? இன்னும் வரல்லியா?
வழக்கப்படி மாலை வெளியே போனாங்க. இன்னும் வரல்லே...
வேலைக்கார முனிசாமியும் போயிட்டா னக்கும்...ம்... சரி நீயும் போகலாம் சினிமாவுக்கு... போ... போ!


...ஹாஸ்டல் ஃபார் ஒர்க்கிங் உமன்? 72'ம் நம்பர் ரூமிலுள்ள மிஸ் மல்லிகாவுக்குக் கனெக்ட் பண்றீங்களா? தாங்க்யூ... ஐ வில் வெயிட்.


... எஸ் ஸார்! உடனேயா? வரேன் சார். பரவாயில்லே, மணி பத்து தானே? அவசரமான விஷயமா? டாக்ஸி பிடிச்சு உடனே வரேன் சார் - நோ மென்ஷன் சார்...!


இரவு பத்து மணிக்கு மேல் அப்படி என்ன அவசர வேலை இருக்கும்? ஆனால் காரணமில்லாமல் அழைக்க மாட்டார். சந்தித்தால் புரிகிறது...


மல்லிகா உள்ளே நுழைந்த சற்றைக்கெல்லாம் தர்மராஜனின் மனைவி மேனகா ஊர் சுற்றி விட்டு வருகிறாள். அப்போது...
காரியதரிசி மல்லிகாவா? இந்த வேளையில் இங்கு எதற்காக வந்தாள்? ஏன் இப்படிப் பரபரப்புடன் திரும்புகிறாள்?


... இத்தனை நாளாக அவளுடன் வெளியில் அடித்த கூத்தெல்லாம் போதாதென்று இப்போது வீட்டிற்கே கூட்டி வந்து விட்டாரா?


தன் கணவனின் அறைக் கதவைத் திறந்து உள்ளே பார்த்த மேனகா...
ஐயோ, கொ... கொ...லை... கொலை ஆ...!


...இன்ஸ்பெக்டர், ஐயோ எப்படிச் சொல்லுவேன் அந்தப் பயங்கரத்தை? என் கணவர் அவரது அறையில் கொலை செய்யப்பட்டுக் கிடக்கிறார்... ஆமாம்... உடனே வாருங்கள்...


போலீஸ் விரைகிறது. பூர்வாங்கச் சடங்குகளுக்குப் பிறகு விசாரணை தொடருகிறது.
நீங்கள் வரும் போது வீட்டில் யாருமில்லையா?
இல்லை. வேலைக்காரன் என்னிடம் அனுமதி பெற்று மாலையே போய் விட்டான். இவர் வந்ததும் சமையல் காரனும் சினிமாவிற்குப் போயிருக்கிறான்.


நீ தான் சமையல்காரனா? ஐயா வரும் போது நீ தானே வீட்டி லிருந்தாய்?
ஆமாங்க. ஐயா வரும் போதே ஏதோ குழப்பமா, கோபமாக்கூட இருந்தாரு. நான் சினிமாவுக்குக் கிளம்பிக்கிட்டிருந் தப்போ யாருக்கோ டெலிபோன் செய் தாரு. அதைக் கேட்க நான் இங்கே இல்லே.


நீங்கள் வரும் போது பரபரப் புடன் வெளியே ஓடிய பெண் மல்லிகாதான் என்று நிச்சய மாகத் தெரியுமா?
நிச்சயமாக அவளே தான். சந்தேகமே இல்லை.


மல்லிகா அவள் அறையில் விசாரிக்கப் படுகிறாள்.
நான் தர்மராஜனின் வீட்டுக்குப் போனது உண்மை. ஆனால் நான் அங்கு போன போது அவரது அறையில் அவர் பிணமாகக் கிடந்தார். அதனால் ஏற்பட்ட 'ஷாக்'கில் நான் எப்படி என் அறைக்குத் திரும்பினேன் என்றே தெரியாது.
சார்.. இதோ இங்கு ஒரு ரிவால்வர் இருக்கிறது..
ஆ!..என்ன?..


இது உங்களுடைய தில்லை என்கிறீர்கள். இது இங்கு எப்படி வந்ததென்றும் தெரியாதில்லையா?
தெரியாது...


... வழக்கில் விவரிக்கப்பட்டது இவ்வளவுதான். சந்தர்ப்பமும் கொலை யுண்டவருடைய மனைவியின் சாட்சி யும் மல்லிகாவைக் குற்றவாளி யாக்கிவிட்டன. டெலிபோன் அழைப்பின் படி மல்லிகா தர்ம ராஜனின் பங்களாவிற்கு வருவதற்குள் என்ன நடந்தது என்பதற்கு ஆதாரம் ஏதுமில்லையே. இங்கு தான் மர்மமிருக்க வேண்டும்.

தொடரும்

# மோதி

# இன்பக் குளியலுக்கு இந்தியாவின் இணையற்ற சோப்

இப்போது இரண்டு சைஸ்களில் உங்களை நாடி வருகிறது. இந்த சோப் தரும் வளம் பொருந்திய பட்டுப்போன்ற நுரை உங்கள் மேனியில் பட்டுக் கொஞ்சும் போது உடல் புல்லரிக்கும். அந்த இன்பத்தில் குளித்து எழுகையில் உலகமே இன்பமயமாகத் தோன்றும். மோதி உங்களுக்கெனவே உருவாக்கப் பட்டது. மல்லிகை, ரோஜா, வெட்டிவேர் ஆகிய மூன்று நறுமணங்கள். இன்றே ஒன்றைத் தேர்ந்தெடுப்பீர். நாளை முதலே இன்பவாரிதியில் குளிப்பீர்!

## மோதி

இன்பக் குளியலுக்கான இணையற்ற சோப்

**இப்போது இரண்டு சைஸ் களில் கிடைக்கிறது.**




டாடா தயாரிப்பு.

OBM-2384 TM



**வா**ய் ஒரு வரவேற்பு வாசல். அழகுச் சிரிப்பையும் ஆனந்தமூட்டும் சொற்களையும் கொண்டு புற வரவேற்பு நிகழ்த்தும் வாய் தான் உடலுக்குத் தேவையான நல்லுணவுக்கும் வரவேற்பு வாசலாக விளங்குகிறது. உடலில் எங்கு நேர்ந்த நோய்க்கும் ஏற்ற மருந்துகளுக்கு வழி, பெரும்பாலும் இந்தப் பிரதான வாயில்தான்!

வாயின் முக்கியமான பகுதி பல். மேல் தாடையிலும் கீழ்த் தாடையிலும் மொத்தமாக உள்ள முப்பத்திரண்டு பற்கள் முகத்துக்கு ஒரு வடிவம் கொடுக்கின்றன; அகத்தின் நிலையை ஆடி போல் காட்டுகின்றன. பற்கள் உணவைத் தேவைப்படி நாராகக் கிழிக்கின்றன; துண்டு துண்டாக வெட்டுகின்றன. பொடிப் பொடியாக அரைக்கின்றன. இப்படி அற்புதமான ஒரு 'மல்டி-பர்பஸ் கிரைண்டர்' ஒவ்வொருவர் வாயிலும் இருக்கிறது.

# முகத்துக்கு வடிவம்; அகத்துக்கு ஆடி!



## ஆரோக்கியம் அழைக்கிறது!

பல்லின் மேற்பகுதி வெளியே தெரிகிறது. ஈறுடன் நெருங்கி நடுப் பகுதியும், இன்னும் ஆழமாகத் தாடை எலும்புடன் இணைந்து, வேர்ப் பகுதியும் இருக்கும்.

பல்லைப் பற்றி ஆயிரம் ஆண்டுகளாகக் கொண்டிருந்த எண்ணங்கள் சரிதானா என்று யோசித்துப் பார்க்கக்கூட மிகச் சமீப காலம் வரை யாருக்கும் தோன்றவில்லை! உதாரணமாக அரிஸ்டாட்டில் சொன்னாராம், ஆண்களை விடப் பெண்களின் வாயில் பற்கள் குறைவு என்று!

பல்லைப் பற்றிய சுவையான சில விவரங்கள்:

புதிதாகப் பிறக்கும் பச்சைக் குழந்தைகளுக்கு வாயில் பல்லே கிடையாது என்பது பொதுவாகச் சரி. ஆனால், ஆயிரம் குழந்தைகளில் ஒன்றுக்கு ஒன்றோ இரண்டோ பல் இருக்கும். அப்படி இருந்தால் குழந்தையின் நாக்கில் புண் வரும்; பால் கொடுக்கும் தாய்க்கும் தொந்தரவு. ஆகவே உடனே அந்தப் பற்களை அப்புறப்படுத்திவிட வேண்டும். இது எளிது. குழந்தைக்கு ஒரு தீங்கும் இல்லை.

குழந்தைக்கு முதலில் தோன்றும் 'பால்' பற்கள் தாமே விழுவதுண்டு, பெரும்பாலும். ஒன்றிரண்டு விழாவிட்டால் அவற்றைத் தொடர்ந்து எழும் நிரந்தரப் பற்கள் வரிசை பிசகி வளரலாம். எனவே தானே விழாத பற்களை வலிய எடுத்துவிட வேண்டியது அவசியம்.

புதிதாகப் பிறக்கும் சில குழந்தைகளின் நாக்கு வெளுத்தபடி இருக்கும். வாயில் தயிர் தடவியதுபோல் இருக்கும். போதிய அளவு உமிழ்நீர் சுரக்காததைக் காட்டும் அடையாளம் இது. இதற்கு மருந்து தாயின் எச்சிலைக் குழந்தையின் நாக்கில் தடவுவதே என்கிறார்கள் வைத்திய நிபுணர்கள்.

தலைவலியா? காரணம் பல்லாகவும் இருக்கலாம். அஜீர்ணம் முதல் புற்றுநோய்வரை எத்தனையோ உபாதைகளின் காரணத்தை அக்கு அக்காக ஆராயும்போது அவற்றில் பல்லின் பங்கு தெரிகிறது — பல்வலியே இல்லாதபோதுகூட! நோயுற்ற பல்லும் பல் இடுக்குகளும் நோய்க் கிருமிகளின் உறைவிடமாகி, சீழ் பிடித்து உள்ளே செல்லும் ஆரோக்கியமான சத்துணவுகளை யெல்லாம் நச்சாக மாற்றி விடுவதுண்டு. இது காரணமாகவே வேறு நோய்க்குத் தரும் மருந்துகள் பலன் அளிக்காது போவதுமுண்டு. எனவேதான் ஈரல் தொல்லை, சிறுநீரகச் சீர்கேடு, இதய வலி போன்றவற்றின் சிகிச்சைக்கு முன் பற்களைச் சோதிக்கிறார்கள் நிபுணர்கள்.

பல் அமைப்பில் ஈறுக்கு மேல் தெரியும் 'மகுடத்தை'ச் சுத்தமாக வைத்துக் கொண்டால் போதும். இது எல்லோருக்கும் வெள்ளை வெளேர் என்று இருப்பதில்லை. ஆரோக்கியம் வேறு, வெண்மை நிறம் வேறு.

உங்கள் வாயில் எண்ணி முப்பத்திரண்டு பற்கள் இராவிட்டாலும் கவலைப்பட வேண்டாம். சிலருக்கு இருபத்தெட்டு அல்லது முப்பதுதான் இருக்கும். ''அறிவுப் பற்கள்'' சிலருக்கு முப்பது வயதிலும் வரலாம், தோன்றாமலேயும் இருக்கலாம்.

''ஆலும் வேலும் பல்லுக்குறுதி'' என்பதை அமெரிக்க நிபுணர்களும் ஒப்புக்கொள்கிறார்கள். விரலால் தேய்ப்பதைவிடச் சுத்தமான முனை நசுங்கிய குச்சி அல்லது பிரஷ் நல்லது. ஈறை நோக்கிக் குத்தாமல், ஈறிலிருந்து வழித்தபடி சுழற்றித் தேய்ப்பது நல்லது. ஈறு, பல்லிடுக்கில் ஒட்டிக்கொண்டிருக்கும் அழுக்குகள் வெளிவர இதுவே வழி. பல்லின் உட்புறமும், கடைவாய்ப் பற்களின் பின்புறமும் தேய்ப்போர் எத்தனை பேர்? இதில் சிரத்தை தேவை. ஒவ்வொரு முறை உணவுக்குப் பிறகும், படுக்கப் போகும் முன்பும் பல் தேய்ப்பது உத்தமம். பேஸ்ட்டியை விடப் பசை நல்லது. பொடியானால் மிகச் சன்னமாக இருக்க வேண்டும். சலித்த தூள் பொடியும் நல்லது. ஒரு பிரஷை நாற்பது ஐம்பது நாட்களுக்கு மேல் தொடர்ந்து பயன்படுத்தக் கூடாது.

இப்படி யெல்லாம் பார்த்துப் பார்த்து ஜாக்கிரதையாக இருக்கும் மேல் நாட்டினரின் பற்கள் சீக்கிரம் சொத்தையாவதேன்? அவர்களது உணவுப் பழக்கமே காரணம் என்கிறார் ஒரு நிபுணர். வாய்க்கும் பல்லுக்கும் போதிய அளவு வேலை தராமல் உணவு எல்லாம் மிருதுவாக்கப்படுவது ஒரு காரணமாம். சாப்பாட்டுக்குப் பின் ஓர் ஆப்பிளைக் 'கறுக்கு முறுக்கு' என்று கடித்துச் சாப்பிடுவது பல்லைப் பாதுகாக்க ஒரு வழியாம். ''வேளைக்கு ஓர் ஆப்பிளா?'' என்று அதிர்ச்சியடைய வேண்டாம், ஒரு பெரிய துண்டு தேங்காயைக் கடித்துச்சாப்பிட்டால் போதும் பல் பிழைக்கும்; நீண்ட நாட்கள் உழைக்கும்.

பல்லின் மற்றொரு விரோதி வெள்ளைச் சர்க்கரை. நாட்டுச் சர்க்கரையே நண்பன். குழந்தைகளின் பல் விரைவில் பாழாக எளிய வழி, அடிக்கடி சாக்லேட், மிட்டாய்கள் தின்று வாயைக் கொப்பளிக்காமல் இருப்பதே. பல்லில் ஒட்டிய சர்க்கரைத் துகள்கள் புளித்து, அரித்து விடும். 'சப்பிச் சாப்பிட' என்று வரும் சில சர்க்கரை பூசிய வைட்டமின் மாத்திரைகளும் நாம் இந்தத் தவற்றைச் செய்ய வைக்கின்றன.

புகையிலை, சுவைத்தாலும் புகைத்தாலும் பல்லுக்குக் கேடுதான். வாய்ப் பகுதியில் புற்றுநோய் வர வாய்ப்புண்டு.

நல்ல பகுஞ் சோலைக்கு இடையே நாற்றம் மிக்க சாக்கடை இருப்பதை நினைவூட்டும், பயோரியா என்னும் ஈற்றுத் தொல்லை. ஈறு சரியில்லாவிட்டால் நல்ல பற்களும் ஆட்டம் காணும். போஷாக்குக் குறைவாலும் இது நேரலாம். நாக்குத் தடித்து, கழுத்து வீங்கி, மூச்சு முட்டி உயிருக்கு அபாயமாவதும் உண்டு. பெனிசிலின் மருந்து வந்தபிறகு நோய் அடையாளங்களை உடனே கட்டுப்படுத்த முடிகிறது.

வாய் திறந்து சிரிக்க வெட்கமாக இருக்கிறதா? பல் அழகாக இல்லையே என்று தாழ்வு மனப்பான்மை வேண்டாம். இந்த நூற்றாண்டில் பல்லைப் பொறுத்தவரை இயற்கையின் குறையைப் போக்க ஏராளமான வசதிகள் உள்ளன. செலவு குறைந்த சிகிச்சைகளும் உள்ளன. தேய்ந்து பள்ளம் விழுந்த கடைவாய்ப் பல்லின் ஓட்டையை அடைக்கலாம். சொத்தைப் பற்களைப் பிடுங்கி விடலாம்;



அதை அடுத்த பற்கள் பாழாகாமல் காக்கலாம்; ஏறுமாறாக வளரும் பற்களின் வரிசையைக் 'கிளிப்' போட்டு ஒழுங்காக்கலாம். பிடுங்கிய பற்களுக்குப் பதில் புதிய பற்களை வைத்தது தெரியாமல் பொருத்திக் கொள்ளலாம். அவசியமானால் அத்தனை பற்களும் புதிதாகக் கட்டிக் கொள்ளலாம். யாருக்கும் தெரிய வேண்டியதில்லை. பயமின்றிப் பலமாகச் சிரிக்கலாம்.

பல்லைப் பாதுகாத்தால்தான் பொரிவிளாங்காய் உருண்டையும் சீடையும் தின்னலாம். ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பல் வைத்தியரிடம் போவது எளிது. சிக்கனமானது. அப்படிப் போவதால் பெரிய, செலவு மிக்க சிகிச்சைகளைத் தவிர்க்கலாம்.

வாயிலே விரல் சப்புவது, கண்டதையும் கடிப்பது போன்ற பழக்கமுள்ள குழந்தைகளின் பல் வரிசை பாதிக்கப்படும். வாயிலே ஒரு நிக்கல் காசை வைத்து ரகசியமாகச் சப்பிக் கொண்டிருந்தது இங்கிலாந்தில் ஒரு குழந்தை. காரணம் ஆராய்ந்தபோது அதற்குப் போஷாக்குக் குறைவு இருப்பது தெரிய வந்தது.

வாயிலே, பல்லிலே நேரும் உபாதைகளுக்குச் சிகிச்சை சாதாரணமாக ஒரு வாரம், பத்து நாட்களில் குணம் காட்டும். அதற்கு மேலும் குணம் தெரியாவிட்டால் குறை வேறு உள்ளுறுப்புக்களில் எங்கேயோ உள்ளதாய் உணர்ந்து ஆராய வேண்டும்.

பல் ஆரோக்கியமாக இருப்பதற்கு நல்ல உணவுப் பழக்கம் இருந்தால் போதும். தேவையான வைட்டமின் கீரைகளில், காரெட்டுப் போன்ற காய்கறிகளில் இருக்கிறது; கொய்யா, வாழை, பப்பாளி போன்ற பழங்களில் இருக்கிறது. முட்டை, மீன் உணவில் இருக்கிறது. பல்லுக்குச் சிறப்பாகவும் உடலுக்குப் பொதுவாகவும் ஏற்ற எளிய தின்பண்டம்—வெல்லக் கடலை உருண்டை.

ஆலோசனை: **டாக்டர் ஜே.ஜி. கண்ணப்பன்**
கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

# எங்கெங்கே பெட்ரோலியம் தயாரிப்புக்கள் தேவையோ அங்கெல்லாம் சேர்ப்பிக்கிறோம்

நாடு நெடுகப் பரவிய சேமிப்பு, விநியோகப் பணிகள் மூலம் இண்டியன் ஆயில், பெட்ரோலியம் தயாரிப்புக்களை இடையறாது சப்ளை செய்தவண்ணம், தேச சேவை புரிந்துவருகின்றது. 200க்கும் மேற்பட்ட நிர்மாணிப்புக்கள், மொத்தவாரி டெப்போக்கள், விமான எரிபொருள் நிலையங்கள், 3000க்கும் மேற்பட்ட பெட்ரோல்/டீசல் நிலையங்கள் ஆகியவற்றின் உதவியால், தங்கள் தயாரிப்புக்களை எங்கெல்லாம் தேவையோ அங்கெல்லாம் சேர்ப்பித்துவருகின்றது இண்டியன் ஆயில். எல்லாவிதப் போக்குவரத்து சாதனங்களும் இதன் பொருட்டு ஈடுபடுத்தப் படுகின்றன—கரைப்புற டாங்கர்கள், பைப்லைன்கள், ரெயில் டாங்கு வாகன்கள், டாங்கு டிரக்குகள், டாங்கு வண்டிகள் எல்லாமே.

1971-72லே இண்டியன் ஆயில் 140 லட்சம் கிலோலிட்டர் அளவுள்ள தயாரிப்புக்களை விற்பனைக்கு விடுத்துள்ளது—இதன் மூலம், நாட்டின் தேவையிலே ஏறக்குறைய 55 சதவிகித அளவை ஈடுசெய்து, நாட்டின் அபிவிருத்தித் திட்டங்களுக்கும், தேசப் பாதுகாப்புக்கும் அரும்பணி ஆற்றியுள்ளது.




—பொருளாதார வளமைக்கான தேசியப் பொறுப்புறவு

இண்டியன் ஆயில் கார்பொரேஷன் லிமிடெட்.

INDIAN OIL

# உடலில் ஊனம்; உள்ளத்தில் ஊக்கம்!

## ஒரு கரம் போதுமே!

சென்னை ராயப்பேட்டையில் நடுநாயகமான பகுதியில், ஓர் அச்சகம்.

இந்தியன் ஏர் - லைன்ஸ், லைப் இன்ஷுரன்ஸ் கார்ப்பரேஷன், ஸ்பென்சர், பர்மா ஷெல் போன்ற பெரிய நிறுவனங்கள் தவிர, பலப் பல பாங்குகளுக்கும் தேவைப்படும் அச்சுப் பணிகளைச் செய்து வருகிறது அந்த அச்சகம். பெயர்: ஸிடி பிரிண்டிங் ஒர்க்ஸ்.

காலை பத்து மணிக்குச் சுறுசுறுப்புடன் அச்சகம் செயல்படுகிறது. யந்திரங்கள் சுழலும் ஓசை.

முன்புறம் தனி அறையில், சந்தனப் பொட்டுத் துலங்க, நிர்வாகி திரு பத்மநாபன் புரூப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

டிரிங் டிரிங் என்று டெலிபோன் ஒலிக்கிறது. அதே சமயத்தில் அச்சாகவிருக்கும் ஒரு லெட்ஜர் தாளுடன் விரைந்து வருகிறார் அச்சக ஊழியர் ஒருவர். ''எஸ்...வணக்கம்!'' இடது கரத்தால் ரிசீவரை எடுத்துப் பேசுகிறார் நிர்வாகி.

மறு கோடியிலிருந்து செய்தி: ''ஹலோ! அர்ஜண்ட் மேட்டர். டெலிபோனில் சொல்கிறேன். எழுதிக் கொள்ளுங்கள்... ஐந்நூறு இன்விடேஷன் கார்டுகள் சாயந்திரம் வேண்டும்!....''

''ஓ. கே. மாட்டரைச் சொல்லுங்கள்'' என ரிசீவரை இடது தோள் — முகவாயில் பதித்துக் கொண்டு, இடது கரத்தால் டெலிபோனில் கூறப்படும் வாசகங்களை மடமட வென்று எழுதிக் கொள்கிறார். எழுதியதை ஒருமுறை இடது கரத்தால் பிடித்தபடியே படிக்கிறார். ''சரியாக இருக்கிறது!'' என்று பதில் வந்தவுடன் ரிசீவரை வைக்கிறார்.

டெலிபோனை இடது தோளில் — கழுத்தில் பிணைத்தபடி இடது கரத்தால் ஏன் அவர் எழுத வேண்டும்?

ஆம் — ஸிடி பிரிண்டிங் ஒர்க்ஸ் நிர்வாகி பத்மநாபனுக்கு வலதுகரம் முழுவதும் இல்லை.

ஆனாலும் என்ன, அச்சக ஊழியர் கொண்டுவந்த அச்சாகவிருக்கும் லெட்ஜர் தாளை ஓரம் மடித்து, கோணல் இருக்கிறதா எனப் பார்த்து, அதற்கும் 'ஸ்டிரைக் ஆர்டர்' தருகிறார்.

வாடிக்கையாளர் ஒருவர் நுழைகிறார்.

''வாருங்கள் மிஸ்டர் பிந்து!...'' என வந்த வாடிக்கையாளரை இடது கரத்தால் கைகுலுக்கி வரவேற்று, சரளமாக ஆங்கிலத்தில் உரையாடும் நிர்வாகி பத்மநாபன் ஒரு பி. ஏ. பட்டதாரியும் கூட.

வலது தோளில் ரண சிகிச்சை செய்த தழும்பு தென்படவே, காரணம் கேட்கிறேன்.

''என் தந்தை ராமய்யர் டெல்கி ரயில்வே ஸ்டேஷனில் (உட்கி—கதக் மார்க்கம்) உதவி ஸ்டேஷன் மாஸ்டராக இருந்தார். அப்போது எனக்கு இரண்டு வயதுகூட நிரம்பவில்லை. என்னைத் தூக்கி வந்தவனும் நானும் கூட்ஸ் ஷண்டிங்கில் அகப்பட்டோம்... நான் மட்டும் கூட்ஸ் பெட்டிகள் இரண்டு இணையும் ஜாயிண்டில் விழுந்து சிக்கிவிட்டேன். வலது கை முழுதும் நன்றாக அரைபட்டு விட்டது. தோள்வரை சிக்கிக்கொள்ள நான் தொங்கினேன். தூக்கி வந்தவன் போட்ட கூச்சலால் ஆட்கள் வந்து நான் காப்பாற்றப்பட்டேன்.....

''ஒருவெள்ளைக்கார டாக்டர், பெயர் நினைவில்லை—என்னை உயிர் பிழைக்க வைத்தார்.''

''பள்ளிப் பருவத்தில் எப்படி இருந்தீர்கள்?''—என் கேள்வி.

''எல்லாப் பாடங்களிலும் நல்ல மார்க்குகள் வாங்குவேன். எந்த மாணவனும் என்னைக் கேலி செய்ததில்லை.... திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தவன் நான். பாளையங்கோட்டையில் ஹைஸ்கூல் படிப்பு. பிறகு நெல்லை செயிண்ட் சேவியர் கல்லூரியில் பட்டம் வாங்கினேன்...''

''சமூகத்தில் பலருடன் பழகும்போது உங்களுக்கு ஏற்படும் அநுபவங்கள்?''

''தன்னம்பிக்கைக் குறைவோ, தாழ்வு மனப்பான்மையோ எனக்கு ஏற்படுவதில்லை. பிறரால் விரும்பப்படும் அளவுக்குத் தொழில் ரீதியில் என்னுடன் தொடர்பு உள்ளவர்களிடம் பழகி வருகிறேன். என் அத்தையின் புதல்வர் (அவர் பெயரும் பத்மநாபன்தான்) என்னைச் சென்னைக்கு அழைத்து வந்து அவர் அச்சகத்தின் நிர்வாகியாக வேலையில் சேர்த்துக்கொண்டார். அந்தக் குடும்பத்துக்கு நான் ரொம்பவும் கடமைப் பட்டிருக்கிறேன்'' என்று கூறும்போது உணர்ச்சி வசப்படுகிறார் திரு பத்மநாபன். பேட்டி: **ஏ. சுவாமிநாதன்**





எழுத்துப் பிழையோ என்று பார்க்கிறீர்களா? அல்ல, அல்ல. காஞ்சி காமகோடியின் இன்னொர் அருள் வடிவம்தான் காசி காமகோடியாக உருவாகியிருக்கிறது. — அதாவது பரம புண்ணியமான காசியம்பதியில், பரம பாவனமான கங்கா தீரத்தில் ஸ்ரீ காமகோடீச்வர பஞ்சாயதன ஆலயமாக எழும்பி வளர்ந்திருக்கிறது.

முக்தி க்ஷேத்திரங்களில் காசியும் காஞ்சியும் ஒன்றுக்கொன்று இணையானவை. ஈசுவர சாந்நித்திய விசேஷம் மட்டுமின்றி இரண்டுமே சக்தி பீடங்களாகும். காசி விசாலாக்ஷியே காஞ்சி காமாக்ஷி. இக் காமாக்ஷியே காசி அன்னபூரணியையும் தன்னுள் கொண்டு இரு நாழி நெல்லால் முப்பத்திரண்டு அறங்களையும் ஆற்றியவள். காசி, காஞ்சி இரண்டுமே ஆதி காலம் தொட்டுக் கல்வியில் கரையிலாதன.

# காசி காமகோடி

ஆதிசங்கரர் காசியில் அன்னபூரணியிடம் ஞான வைராக்கிய பிக்ஷை கேட்டுத் தமது பாஷ்யப் பணியைத் தொடங்கி எவருக்கெல்லாம் அறிவுப் பிக்ஷை போடலானார். இறுதியாக அவர் காஞ்சி காமகோடியிலேயே கனிந்து நிறைவுற்று, அதுவே தாமாக ஐக்கியமுற்றார்.



காசியில் யாத்திரிகர்கள் வருடம் முழுவதும் குழுமிய வண்ணம் இருக்கிறார்கள். இவர்கள் யாவருக்கும் காஞ்சி வந்து காமகோடி தரிசனம் செய்ய இயலாத வசதிக் குறைவை இட்டு நிரப்பவே அருள் வள்ளல் காஞ்சிப் பெரியவர்களின் திருவுளத்தில் காமகோடி பஞ்சாயதனேச்வர ஆலயம் உருவாயிற்று. பெரியவர்களிடம் தம்மை முழுதும் அர்ப்பணித்துக் கொண்ட பரம பாக்கியசாலியான அடியார் ஒருவரின் கைங்கரியத்தால் பெரியவர்களின் சிந்தனையே இன்று சிற்பிகள் செதுக்கிய அற்புதக் கற்கோயிலாகிக் கங்கைக் கரையில் நிற்கிறது.

காசிக்கு வந்து கூடும் நாட்டின் நாலு திசையினரும் தமிழகச் சிற்ப மரபுகளின் பெருமையையும் ஆலய விதிகளின் மகிமையையும் உணர வேண்டும் என்று பெரியவர்கள் அவாக் கொண்டார்கள். அந்த அவாவை ஏராளமான தமிழகச் சிற்பிகளின் உளிகள் இந்த ஆலயத்தில் செயலாக்கியிருக்கின்றன.

வைதிக மரபுப்படி ஆதிசங்கரர் ஸ்தாபித்த சிவபெருமான் — அம்பிகை — திருமால் —





கணேசர் — சூரியன் ஆகிய ஐவரின் கூட்டு வழிபாட்டுக்கு (இதுவே பஞ்சாயதன பூஜை எனப்படும்) உரிய முறையில் இவ்வாலயத்தில் சந்நிதிகள் அமைக்கப்பட்டிருப்பதால் இது பஞ்சாயதனேசுவரர் ஆலயம் எனப் பெயர் பெற்றிருக்கிறது. சிவனை மத்தியில் கொண்ட இத்திருக்கோயிலில் மேற்சொன்ன சந்நிதிகள் தவிர ஸ்ரீ காமாக்ஷியன்னையும் குடிகொண்டுள்ளாள். மற்றும் முருகப் பெருமான், பட்டாபிஷேக ராமர், ஆஞ்சநேயர், சிஷ்யர்களோடு ஸ்ரீ ஆதிசங்கரர், குரு பாதுகை, கஜலக்ஷ்மி, ஐயப்ப சாஸ்தா, வீரபத்ரர், பைரவர், கங்கா தேவி அனைவரும் இடம் பெற்று முழுமை தருகின்றனர்.

பெரியவர்களின் அருள் இதயமும் கலைக் கண்ணும் கலந்த பல யோசனைகள் இவ்வாலயத்துக்குச் சிறப்பூட்டுகின்றன. உதாரணமாக, கணேச — சூரிய பிம்பங்கள் சிவப்புக் கல்லிலும், அம்பாள் — விஷ்ணு மூர்த்தங்கள் பச்சை பாய்ந்த கல்லிலும் வடிக்கப்பட்டுள்ளன. சிவபெருமானின் இருபத்தைந்து லீலைகளும் செதுக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாண்டு 'கல்கி' தீபாவளி மலரில் வெளியான கருட்டுப் பள்ளியில் சயனக் கோலத்தில் உள்ள சிவபெருமானின் விக்கிரகத்துக்குக்கூடக் காசி காமகோடீசுவரர் ஆலயத்தில் பிரதி இருக்கிறது! ஸ்வாமிக்கு ஸ்ரீ காமகோடீசுவரர் என்றும், ஸ்ரீ அம்பிகைக்குக் காமகோடி தேவி என்றும் திருநாமம் இருப்பதற்கேற்ப காமகோடியின் யந்திர ஸ்வரூபமான பூரண மேரு சக்கரமும் இங்கு பிரதிஷ்டை செய்யப்படுவது வெகு விசேஷமாகும்.

தமிழக பாணியில் அற்புத மூன் கோபுரத்தோடும், கவினுறு சந்நிதி விமானங்களுடனும் எழும்பியுள்ளது இக்கோயில். கங்காநதியில் செல்லும் யாத்திரிகர்களுக்கு நீண்ட தூரம் எடுப்பாகக் காட்சி தந்து, தென்னகக் கலா சார மாண்பை ஒளி வீசுகிறதாம்!

இத்துணை பெருமை பொருந்திய கோயிலுக்கு மேலும் பெருமை தரும் விதத்தில் குடமுழுக்கு நடக்கவிருக்கிறது.

ஸ்ரீ காமகோடீசுவரர் ஆலயத்துக்கு ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளான பூஜ்ய புதுப் பெரியவர்கள் கும்பாபிஷேகம் செய்கிறார்கள். இந்த மகத்தான வைபவம் தை மாதம் வஸந்த பஞ்சமியன்று — இந்த ஜனவரி 28ந் தேதியன்று காசியில் நடைபெறுகிறது. ஸ்ரீ புதுப் பெரியவர்களின் வெற்றிகரமான உத்தரபாரத திக்விஜயத்தில் முன்பு தில்லியிலே ஸ்வாமிநாதனுக்குக் குடமுழுக்குச் செய்தார்கள். அதுவே ஸ்ரீ பெரியவர்களின் பூர்வாசிரம நாமம். இப்போது பீடத்தின் பெயர் கொண்ட ஈசுவரனுக்குக் கும்பாபிஷேகம் செய்வதும் மிகப் பொருத்தமே.

ஜனவரி 28ந் தேதியன்று நாம் அனைவரும் ஸ்தூலமாகவோ, மானசீகமாகவோ காசி காமகோடீசுவரர் குடமுழுக்கில் கலந்து கொண்டு, ஐயனின் அருள் முழுக்கில் இன்புறுவோமாக!

புகைப்படங்கள்: காசிக்கு வந்து கூடும் யாத்திரிகர்கள் தமிழகச் சிற்ப மரபுகளின் பெருமையை உணரத்தக்க விதத்தில் உருவாகியுள்ள ஸ்ரீ காமகோடி பஞ்சாயதனேசுவர ஆலயத்தின் இரு எழில்மிகு தோற்றங்கள்.







# பால்பவுடரும், பாவையும், பலராமனும்....

'மார்க்கண்டேயா பிரைவேட் லிமிடெட்'டின் ஆறு டஜன் நிரந்தர ஊழியர்களில் ஒருவனான பலராமன், ஒரு வியாழக்கிழமை காலை பதினொரு மணி அளவில், ஆபீசில் தன் நாற்காலியில் சாய்ந்தபடியே தீவிரமாகச் சிந்தனையில் மூழ்கியிருந்தான்.

'சிந்தனை' என்றால் 'யோசனை; எதைப் பற்றியாவது தீவிரமாக யோசித்து மண்டையைப் போட்டு உடைத்துக் கொள்வது' என்றெல்லாம் அர்த்தம் செய்துகொள்ளக் கூடாது. இவையெல்லாம் சாதாரண அகராதி தரும் அர்த்தங்கள். பலராமனின் அகராதியில் 'சிந்தனை' என்ற சொல்லுக்குப் 'பகல் தூக்கம்; அதுவும் ஆபீஸ் நேரத்தில் அடுத்த சீட் ஆசாமிக்குக்கூடத் தெரியாமல் போடுகிற அசகாயசூரத்தனமான தூக்கம்' என்றுதான் அர்த்தம். பலராமன் இப்படிச் 'சிந்தனை' செய்வதில் பத்மபூஷண் பட்டம் பெற முற்றிலும் தகுதி வாய்ந்தவன்.

இரவு இரண்டு மணி வரையில் கண் விழித்து வேலை செய்திருந்தான் பலராமன். ('வேலை' என்பதற்குத் 'துப்பறியும் நாவல் படிப்பது' என்பது பலராமனின் அகராதி தரும் விளக்கம் !) அந்த 'வேலை'க் களைப்புதான் அவனை இப்படி அயர வைத்திருந்தது.

வழக்கம்போல் நாலு பெரிய 'லெட்ஜர்'கள் ஆறு 'வவுச்சர்' பைல்கள், முக்கால் டஜன் இதர பைல்கள் ஆகியவற்றை மேஜையின் மீது அரண் போல் அடுக்கி வைத்துவிட்டு, கறுப்புக் கண்ணாடியை எடுத்து முகத்திலே மாட்டிக் கொண்டு பைலைப் பார்க்கிற பாவனையில், 'சிந்தனை'யில் ஆழ்ந்திருந்தான் பலராமன். எனவே, முதலாளி அடித்த மணி பயங்கரமாக மூன்று முறை ஒலித்தும் அவனுடைய 'சிந்தனை' கலையவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் பியூன் ஒருவன் பலராமனை நெருங்கி அரண்களை விலக்கி, உலுப்பி எழுப்பி விஷயத்தைச் சொன்னான்.

"வாப்பா "என்றார் மார்க்கண்டேயன். வழக்கமாக அவர் எந்த ஊழியரையும் 'கழுத்தறுப்பு', 'தலைவேதனை', 'தண்டச் சம்பளம்' என்றெல்லாம் 'வா'வுடன் சேர்த்து அழைத்தே பழக்கமாதலால், இந்த வெறும் 'வா' பலராமனைச் சற்றே சங்கடப்படுத்தியது.

'' உட்கார் !'' என்றார் மார்க்கண்டேயன் அடுத்தபடி. இதுவும் அதிகப்படிதான். யாரையும் மார்க்கண்டேயன் உட்காரச் சொன்னதில்லை.

''காப்பி சாப்பிடுகிறாயா?'' என்று மீண்டும் ஓர் உபசரிப்பு. 'எல்லாவற்றுக்கும் சேர்த்துப் பெரிய வெடிகுண்டு ஏதோ இருக்கிறது' என்று பலராமனின் உள்ளுணர்வு எச்சரித்தது.

காப்பி வந்தது. பலராமன் ஒரு வாய் பருகியதுமே, ''விஷயத்தைச் சொல்லிவிடுகிறேன் !'' என்றார் முதலாளி.

''சொல்லுங்கள், சார் !''

''முன்னே ஓரிரு தடவைகளில் நீ எனக்குத் தக்க சமயத்தில் கை கொடுத்து உதவியிருக்கிறாய்..... இல்லையா ?''

'' எஸ் சார்.... உங்க வீட்டுச் சப்போட்டா மரத்துக்கு உரமும், புங்கனூர்ப் பசுவுக்குப் பருத்திக் கொட்டையும் 'பிளாக்'கிலே வாங்கி வந்து கொடுத்தேன் !......''

''அதே போல் இப்போதும் நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும்.... இது கொஞ்சம் சிரமமானது.... கிடைக்காத விஷயம்....''

''புலிப் பால் வேண்டுமா?.... ஜூ தலைமை அதிகாரி என் மாமாவோட மாப்பிள்ளைதான். அவர்கிட்டே சொல்லி......''

''வேண்டாம்.... இது....''

''நரிக்கொம்பா ?.... எங்க அத்தானுக்கு அத்தியந்த சிநேகிதர் ஒருவர் நரி வளர்க்கிறார்.......''

'' அதுவும் தேவையில்லை..... இது பா...''

''பாம்பே அதிசய சப்பாத்தியா?.... எவ்வளவு டஜன் வேண்டும்?''

'' இல்லையப்பா.... குழந்தைகள் பால் பவுடர் டின் மூன்றே மூன்று வாங்கிக் கொடு, போதும் !''



காற்றுப் போன பலூனாக, புஸ்ஸென்று பலராமனின் உற்சாகமெல்லாம் அமுங்கியே போய் விட்டது.''

''என்ன கேட்கிறீர்கள்?'' என்றான் ஈனஸ்வரத்தில்.

''பால் பவுடர் — பேபி ஃபுட் — மூன்று டின்கள்!''

''முகத்துக்குப் போடுகிற பவுடர் வேண்டுமானால் சொல்லுங்கள்; மூன்று என்ன, முப்பது வேண்டுமானாலும் தருகிறேன்!''

''அது சரியப்பா.... ஆனால் மின்னியும் ஜின்னியும் டால்கம் பவுடரைக் கரைத்துக் குடிக்கப் பழகவில்லையே!''

(கவனிக்க: மின்னி ஜின்னி — மத்திய அரசின் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தில் நம்பிக்கை இல்லாத மார்க்கண்டேயனின் இரட்டைக் குழந்தைகள்.)

''அவசியம் பால் டின்தான் வேண்டுமா, சார்?''

''பவுடர் இருக்கிற பால் டின்!'' என்று இருத்தினார் முதலாளி. தொடர்ந்து, ''அது கிடைக்கும் வரை நீ ஆபீஸ் வேலை எதுவும் பார்க்க வேண்டாம்..... டின் கிடைத்தவுடன் பங்களாவுக்கு வந்து சேர். இந்தா பணம்!'' என்றார்.

மார்க்கண்டேயன் மேஜையின் மீது விட்டெறிந்த ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களைப் பொறுக்கிக்கொண்டு வெளியேறிய பலராமன் உடனடியாகக் குழந்தைகள் பால் பவுடர் டின்னுக்கான வேட்டையில் இறங்கினான் ஏமாற்றத்துடன்.

மறுநாள் காலை பலராமன் வழக்கம் போல் எட்டரை மணிக்கு எழுந்திருந்து சுறுசுறுப்பாகப் பல் தேய்த்துக் கொண்டிருந்தபோது, அவனுடைய நண்பனும், மருந்துக் கம்பெனிப் பிரதிநிதியுமான பத்ரிநாத் வந்து சேர்ந்தான்.

''ஹாய் பத்ரி! சரியான சமயத்தில்தான் வந்து சேர்ந்திருக்கிறாய்..... எனக்கு நீ ஓர் உதவி செய்ய வேண்டுமே!''

''முதலில் மூணு மாசம் என்கிட்டே கைமாற்றாக வாங்கின முப்பத்தாறு ரூபாயைக் கீழே வை..... அப்புறம் கேள் எந்த உதவி வேண்டுமானாலும் — பால் பவுடர் டின் உள்பட!''

• முகுந்தன் •



''ஹாய்!'' என்று வீறிட்டான் பலராமன். ''எப்படி அதற்குள் என் பிரச்னை என்னவென்று கண்டு பிடித்தாய்?''

''நீதான் நேற்று மயிலாப்பூரில் கடை கடையாய் ஏறி இறங்கியதை நான் கண் கூடாகப் பார்த்தேனே!''

''பத்ரி! ப்ளீஸ் ஹெல்ப் மீ... டின் இல்லாமல் நான் ஆபீசுக்குப் போனால் முதலாளி என் முதுகிலே டின் கட்டி விடுவார்....எப்படியாவது, தயவு பண்ணி, பெரிய மனசு பண்ணி மனமிரங்கி.......''

''ஸ்டாப்! இந்தக் காக்காயெல்லாம் வேண்டாம்.... முதலில் முப்பத்தாறு, அப்புறம் முறையீடு!''

''இந்தா, பிடி!'' என்று பர்ஸைத் திறந்து, பணத்தை எண்ணிக் கொடுத்தான் பலராமன். ''சொல்! எங்கே கிடைக்கும் பால் டின்?''

''புரசைவாக்கத்திலே மூக்காத்தான் தெரு என்று ஒன்று இருக்கிறது..... அதிலே ஒரு கடை. 'பாலாஜி ஸ்டோர்ஸ்' என்று பெயர்... அந்தக் கடையிலே இருப்பதாகச் சொல்லிக்



கொள்கிறார்கள்... நீ கேட்டுப் பார்; கிடைக்கலாம்!''

பெரிய நூக்க மர மேஜையைப் போட்டுக் கொண்டு கொழுகொழுவென்ற மீசையுடன் உட்கார்ந்திருந்த கடை முதலாளியை அணுகினான் பலராமன். ''சார்! பால் பவுடர்—பேபி ஃபுட்—மூணு டின் வேணுமே!''

அவ்வளவுதான்; எலெக்ட்ரிக் பட்டாஸாகச் சீறி வெடித்தார் அவர். ''அதெல்லாம் ஒண்ணும் இல்லே ஐயா.... 'ஸ்டாக் இல்லே'ன்னு கொட்டை எழுத்திலே போர்டிலே எழுதிப் போட்டிருக்கேனே, பார்க்கல்லே?''

'' போர்டு இடக்கட்டும்.... டின்னுக்கு அஞ்சு ரூபா வேணுமானாலும் அதிகமாகத் தரேன்......மூனே மூனு டின் கொடுங்க, போதும் !''

''யாரையா நீ ஒருத்தன் !.... கடா மாடுன்னு உழக்குப் பால் போதும்கிறியே!... போய்யா...!''

அடித்து விரட்டாத குறைதான். அவமானமாகக்கூட இருந்தது பலராமனுக்கு.

கடையைவிட்டு அவன் நகரும் சமயம் திடீரென்று அந்தக் கடையில் சந்திரோதயம் ஆயிற்று. தேவலோக மலர்களின் நறுமணம் மூக்கைத் துளைத்தது. யட்சர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், கிம்புருடர்கள் ஆகியோரின் இன்னிசை தேனருவியாகப் பாய்ந்தோடத் தொடங்கியது.

இத்தனைக்கும் காரணமாக இருந்தவள் ஒரு பெண்: பச்சை நைலக்ஸ் உடுத்திய பளிங்கு மேனிப் பாவை.

அவளைக் கண்டதும் பலராமனின் மனத்தில் ஒளிந்து கொண்டிருந்த வீணையின் தந்திகளையெல்லாம் யாரோ ஒருசேரத் தட்டிவிட்டார்கள். அவன் தன்னை மறந்தான். அவன் தலை கிறுகிறுவென்று சுழன்றது.

அந்தப் பெண் கடைக்குள் நுழைந்து சன்னமான குரலில் ஏதோ கேட்டாள். கடைக்காரர் பலராமனை ஜாடை காட்டி ஏதோ சொன்னார். பலராமன் புரிந்து கொண்டுவிட்டான். விருட்டென்று அங்கிருந்து நடையைக் கட்டினான்.

தெரு மூலையில் பத்து நிமிடங்கள் அவன் காத்திருந்தது வீண் போகவில்லை. அந்தப் ப.நை.உ.ப.மே.பாவை திரும்பி வந்தாள்— கையிலே ஒரு பையுடன். பையிலே கனம் இருந்தது தெரிந்தது. அவளை அவன் தாண்டிச் செல்லும்போது, ''ஹலோ, மிஸ் !'' என்று அவளை அழைத்தான் பலராமன். அவள் நின்றாள். திரும்பினாள். பார்த்தாள். கேட்டாள் : '' என்ன ?''

''உங்கள் கையில் இருப்பது என்ன?''

''பை !''

''பையிலே ?''

'' கட்டாயம் சொல்லித்தான் ஆக வேண்டுமா ?''

''வேண்டாம். எனக்கே தெரியும்!''

'' அப்படியானால் எதற்காகக் கேட்கிறீர்களாம் ?''

'' அதை நீங்கள் எனக்குக் கொடுக்க வேண்டும்........''

''இது.....இது......''

''தெரியும்..... கடைக்காரர் உங்களுக்கு வேண்டியவர். நீங்கள் எவ்வளவு டின் கேட்டாலும் கொடுப்பார்..... எனக்கு என்றும் கொடுக்க மாட்டார். அதற்காகத்தான்....''

''இது எதற்கு உங்களுக்கு?''

'' எனக்கு இல்லை.!...குழந்தைகளுக்கு.... மின்னி — ஜின்னிக்கு!''

''மின்னி — ஜின்னி ?''

'' எஸ் ! இரட்டை !''

''இதையா கொடுக்கப் போகிறீர்கள்?''

''இதையேதான் !''

'' இது உடம்புக்கு ஒத்துக் கொள்ளுமா?''

''பிரமாதமாக !''

அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு ஏதோ யோசித்தாள். பிறகு, ''ஆமாம், நான் கொடுக்காவிட்டால் என்ன செய்வீர்களாம் ?'' என்று கேட்டாள்.

'' இதைத்தான் செய்வேன் !'' என்ற பலராமன், 'லபக்'கென்று அவள் கையிலிருந்த பையைப் பிடுங்கிக் கொண்டு, பக்கத்திலேயே இருந்த ஒரு சந்துக்குள் நுழைந்து ஓடினான். நல்ல வேளையாக அந்தப் பெண் கூக்குரல் எதுவும் எழுப்பவில்லையாதலால் யாரும் அவனைத் துரத்திக் கொண்டு வரவில்லை. எதிர்ப்பட்ட ஓர் ஆட்டோ ரிக்ஷாவை நிறுத்தி, அதில் ஏறிக் கொண்டு அறைக்கு வந்து சேர்ந்தான் பலராமன்.

பவுடர் டின்கள் கிடைத்த மகிழ்ச்சியைக் கொண்டாடுவதற்காக அன்று ஆபீசுக்கு மட்டம் போட்டான். பகல் முழுதும் வீட்டிலேயே 'சிந்தனை'யில் ஆழ்ந்திருந்தான் பலராமன்.

மாலை ஐந்தரை மணிக்குத்தான் விழிப்பு வந்தது. வயிற்றில் சப்பாத்தியைப் போட்டு நிரப்பிக் கொண்டு, மலையாளப் படம் ஒன்றில் போய் உட்கார்ந்தான். அதில்

---

## கலப்படப் பட்டியல் !

உணவுப் பொருட்களில் கலப்படம் செய்வது, குறிப்பிட்ட ஒழுங்குமுறையோடு நடைபெறுகிறது. எல்லா விதமான உணவுப் பண்டங்களிலும் கலப்படம் செய்யப்படுகிறது. உணவுப் பொருட்களுடன் கலப்படம் செய்யப்படும் பொருட்கள் பற்றிய விவரங்களை இந்திய அரசின் பத்திரிகைத் தகவல் அலுவலகம் பின்வருமாறு பட்டியல் போட்டுத் தருகிறது:

| உணவுப்பொருள் | கலப்படப் பொருட்கள் |
|---|---|
| கோதுமை, அரிசி போன்ற தானியங்கள் | களிமண் உருண்டை, நொய் |
| நொய் | மணல் |
| பருப்பு வகைகள் | கேசரிப் பருப்பு |
| மஞ்சள் தூள் | லெட் குரோமேட் தூள் |
| தனியா தூள் | ஸ்டார்ச், மாட்டுச் சாணம் அல்லது குதிரைச் சாணத் தூள் |
| கருப்பு மிளகு | உலர்த்தப்பட்ட பப்பாளி விதைகள் |
| மிளகாய்த் தூள் | மரத் தூள், செங்கல் தூள் |
| சர்க்கரை | மணல், ரவை, வெண்மணல் |
| தேயிலைத் தூள், தேயிலை | கருப்பு உளுந்துப் பருப்புத் தோல், புளியங்கொட்டைத் தூள், மரத்தூள், உபயோகிக்கப்பட்ட தேயிலைத் தூள். |
| காப்பித் தூள் | புளியங்கொட்டைத் தோல் தூள், சிக்கரித் தூள் |
| மசாலாத் தூள் | சாயம், ஸ்டார்ச், களிமண், மாட்டுச் சாணத் தூள் |
| பெருங்காயம் | மணல், மரக் கோந்து |
| உப்பு | வெண் மணல் |
| உணவு எண்ணெய் வகைகள் | கனிஜ எண்ணெய் வகைகள் |
| வெண்ணெய் | ஸ்டார்ச், மிருகக் கொழுப்பு |
| ஐஸ்கிரீம் | செல்லுலோஸ், ஸ்டார்ச், சேர்க்கக்கூடாத வண்ணங்கள் |
| இனிப்புப் பண்டம் | சேர்க்கக்கூடாத வண்ணங்கள் |
| பச்சைப் பட்டாணி | பச்சைச் சாயம் |
| கோதுமை மாவு | ஸ்டார்ச், சாக்குக் கட்டித் தூள். |
| பால் | கொழுப்புச் செறிவு |
| நெய் | வனஸ்பதி |

வந்த கதாநாயகி, காலையில் அவன் பார்த்த அழகியைப் போலவே சாயல் கொண்டிருந்து, அவன் மனத்தை அலைக்கழித்தாள். காலையில் தான் அவளிடம் அப்படி அடாவடித்தனமாக நடந்து கொண்டிருக்கக் கூடாது என்று மனச்சாட்சி உறுத்தியது. அவளை மீண்டும் ஒரு முறை சந்தித்து மன்னிப்புக் கோருவதே நியாயம் என்று தோன்றியது. எனவே, படம் முடிந்ததும் பஸ்ஸைப் பிடித்து நேரே புரசைவாக்கத்துக்கே வந்து சேர்ந்தான்.

மூக்காத்தாள் தெருவிலும் அக்கம்பக்கத்திலும் தேடினால் அந்த அழகு முகம் கட்டாயம் தட்டுப்படும் என்று மனத்துக்குள் ஏதோ ஒன்று சொல்லியது. அதைச் செயல்படுத்த முனைந்தான்.

மணி பத்தரை. மூக்காத்தாள் தெரு இருளில் குளித்துக் கொண்டிருந்தது. நூற்றி யெட்டாவது தடவையாக அந்தத் தெருவில் நடை பயின்று கொண்டிருந்தான் பலராமன். 'பாலாஜி ஸ்டோர்ஸ்' எதிரில் வந்ததும் 'பிரேக்' போட்டது போல் அவன் கால்கள் நின்றன. பளிச்சென்று மூளையில் ஓர் எண்ணம் உதயமாயிற்று. இருட்டில் அந்தக் கடை ஓரமாக ஒதுங்கினான். பூட்டியிருந்த கதவைத் தடவிப் பார்த்தான். மேலும் கீழும் இரும்புச் சட்டங்கள். மொத்தம் மூன்றே பூட்டுக்கள்.

பாண்ட் பையிலிருந்த சாவிக் கொத்தை எடுத்தான். பூட்டுக்களில் போட்டுத் திருப்பினான். அவ்வப்போது சாவியை எடுத்துவிட்டுக் கொத்தில் இருந்த சிறிய திருப்புளியால் சில கைவேலைகளும் செய்தான். ஐந்து நிமிடப் பிடிவாதத்துக்குப் பிறகு பூட்டுகள் வாயைப் பிளந்தன. கதவை மெதுவாகத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான் பலராமன்.

கும்மிருட்டு. பலசரக்குக் கடைகளுக்கே உரிய நெடி. மேஜையில் இடிக்காமல், தராசில் மோதாமல், எண்ணெய் டின்களைக் கொட்டிக் கவிழ்க்காமல், மெள்ளத் தடவிக் கொண்டே முன்னேறினான்.

கடையின் பின்புறம் ஒரு சின்ன அறை. கிடங்கு போல் இருக்கிறது. சுவரில் தடவி, சுவிச்சைத் தேடி, விளக்கைப் போட்டான்.

புளி மூட்டைகள், தேங்காயெண்ணெய் டின்கள், வெல்லச் சாக்குகள் இவற்றுக்கு நடுவே வரிசை வரிசையாகப் பால் பவுடர் டின்களும் அடுக்கி வைக்கப்பட்டிருப்பதைக் கண்டான். மனத்துக்குள் புன்முறுவல் பூத்துக் கொண்டான்.

விளக்கை அணைத்துவிட்டு, இருட்டில் பழையபடி நகர்ந்து, கடைக்கு வெளியே வந்தான் பலராமன். இரும்புச் சட்டங்களைப் பழையபடி பொருத்தி, பூட்டுக்களை மாட்டிப் பூட்டப் போகும் சமயத்தில் —

கப்பென்று அவன் கையை யாரோ பிடித்தார்கள். வெறும் பிடி அல்ல. இரும்புப் பிடி, கரடிப் பிடி.

அவன் முகத்துக்கு நேரே டார்ச் விளக்கு வீசப்பட்டது. கண் கூசியது பலராமனுக்கு. இருந்த போதிலும் எதிரில் இருந்தவர் கடைக்காரர்தான் என்பதைக் கண்டுகொண்டான்.

''டாய் இருட்டுப் பயலே!'' என்ற கடைக்காரரது ஆங்காரக் கூச்சலைத் தொடர்ந்து,

## குழந்தை வரம்



அந்தப் பெண்மணி குழந்தைக்காக ரொம்பத் தவம் இருந்தாள். அவள் கடவுளிடம் வந்து நின்றாள். அவள் விருப்பத்தை அறிந்து கொண்ட கடவுள், ''வீட்டுக்குப் போ. நீ செல்லும் பாதையில் ஏதாவது சிறிய ஐந்துவைக் கண்டால், அதனை எடுத்துச் சென்று அன்போடு பேணி வா!'' என்றார். வார்த்தைகளின் பொருளைப் புரிந்து கொள்ளாமல் வீடு நோக்கி நடந்தாள். அவள் சகோதரியின் வீட்டுக்குச் சமீபம் நடந்தபோது, அவள் தன் சகோதரிகளின் குழந்தைகள் மண் புழுதியில் ஆடிக் களிப்பதைக் கண்டாள். அந்தக் குழந்தைகளில் ஒன்று அவள் அருகே வந்து நின்றது. ''எட்டப் போ! மேலே படாதே! உன் மேலே எல்லாம் ஒரே புழுதி!'' என்று சொல்லிவிட்டு மேலே நடந்தாள்.

வீட்டுக்குச் சென்று ஒரு வருஷம் காத்திருந்தாள். அவளுக்குக் குழந்தை வரம் கிட்டவில்லை. அவள் மறுபடியும் கடவுளிடம் முறையிட்டாள்.

''நான் சொன்ன சிறிய ஐந்து உன் முன் எதிர்ப்படவில்லையா?'' என்று கடவுள் வினவினார்.

''இல்லையே!'' என்றாள் அவள்.

''நீ பார்த்தாய். ஆனால் உன் கைகளால் அதைத் தொடக் கூசினாய்'' என்றார் கடவுள். ''ஒரு தாய்க்குரிய பரிவு உன்னிடம் இல்லை. உனக்குக் குழந்தை வரம் தந்து பயனில்லை!''

-ஆப்பிரிக்கக் கதை - பி.எஸ்.எம்

அவன் முகத்தில் வலுவான ஒரு குத்து விழுவதற்கு இருந்தது. நல்லவேளையாகப் பலராமன் சட்டென்று குனிந்து கொண்டதால் முகம் அப்பளமாகாமல் தப்பியது.

யாரோ இரண்டு பேர் பின்புறமாக வந்து பலராமனைப் பிடித்துக் கொண்டார்கள். இதற்காகவே காத்திருந்தது போல், தெரு விளக்குகள் பளிச்சென்று எரியத் தொடங்கின.

பலராமன் சுற்று முற்றும் பார்த்தான். கடைக்காரன் போட்ட கூச்சலைக் கேட்டு, பத்துப் பதினைந்து பேர்கள் கூடிவிட்டிருந்தார்கள். ஆளுக்கு ஆள் அபிப்பிராயங்கள், விமர்சனங்கள்!

''இவனு! காலையிலே தெரு முனையிலே நின்னுக்கிட்டிருந்தானே!''

''இப்போகூட அரை மணி நேரமா இங்கே தான் உலாத்திக்கிட்டிருந்தான்!''

''நோட்டம் பார்த்திருப்பான், திருட்டுப் பயல்!''

''அவன் கிருதாவைப் பாருங்கள் — தான் மாதிரி!''

எல்லோருமாகச் சேர்ந்து ஆளுக்கு ஒரு தர்ம அடியை வழங்குவதற்குள் யாரோ ஒரு

போர்வழி, ''ஸ்டேஷனுக்கு இழுத்துக்கிட்டுப் போவோம் வாங்க... அங்கே இவன் நல்லா உதை தின்னட்டும்!'' என்று சொல்லிப் புண்ணியம் கட்டிக் கொண்டார்.

போலீஸ் ஸ்டேஷனில் கடைக்காரர் வாயைத் திறப்பதற்கு முன்னால் பலராமனே முந்திக் கொண்டான். ''இன்ஸ்பெக்டர் சார்! நான் பூட்டைத் திறந்து கொண்டு இவர் கடைக்குள்ளே நுழைந்தது வாஸ்தவம்தான்.. ஆனால் எதற்காக நுழைந்தேன் தெரியுமா? இவரது திருட்டுத்தனத்தைக் கண்டுபிடிக்கத்தான்!''

''என்னய்யா திருட்டுத்தனம்? பெரிசாக் கண்டு பிடிச்சுட்டே?''

''இன்ஸ்பெக்டர்! இவர் பேபி ஃபுட் டின்களை ஏராளமாகப் பதுக்கி வைத்திருக்கிறார்... கேட்டால் 'ஸ்டாக் இல்லே' என்கிறார்... எல்லாவற்றையும் 'பிளாக்'கில் தள்ளி விடுகிறார்... இதைக் கண்டுபிடிக்கத்தான் நான் கடைக்குள் நுழைந்தேன்...''

''இந்த ஆள் சொல்றதை நம்பாதீங்க சார்!'' என்று விறிட்டார் கடைக்காரர்.

''எஸ் சார்! இவரை நம்பாதீர்கள்! இவர் தான் திருடர்; பகற்கொள்ளைக்காரர்!'' என்று புதுக் குரல் ஒன்றும் கிளம்பியது.

திரும்பிப் பார்த்தான் பலராமன். காலையில் பார்த்த அதே ப. நை. உ. ப. மே. பாவை!

''காலையில் என் கையிலிருந்து பை ஒன்றை இவர் பறித்துக்கொண்டு போனாரா இல்லையா என்று கேளுங்கள்! பைத் திருடர் — பொய் பேசுகிறவர்—பூட்டை உடைக்கிறவர்—இவரா இன்னொருத்தரைக் குற்றம் சாட்டுவது?''

''அந்தப் பையில் என்ன இருந்தது தெரியுமா இன்ஸ்பெக்டர்?... மூன்று பால் பவுடர் டின்கள்! 'பிளாக்'கில் இந்த அம்மாளுக்குக் கடைக்காரர் கொடுத்திருக்கிறார்....''

அந்தப் பச்சை நைலக்ஸ் பச்சைக் கிளி ஏன் இப்படிச் சிரிக்கிறது?... விவரம் புரியாமல் விழித்தான் பலராமன்.

''இன்ஸ்பெக்டர் ஸார்! கடையிலே பால் பவுடர் டின்கள் பதுக்கி வைக்கப்பட்டிருப்பதாகத்தானே இவர் சொல்கிறார்? வாருங்கள், நேரிலேயே போய்ப் பார்த்து விடுவோம்!'' என்றாள் அந்தப் பெண்.

அன்று மூன்றும் தடவையாக 'பாலாஜி'க்கு விஜயம் செய்தான் பலராமன்.

பின்புற அறையில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த பால் பவுடர் டின்களைச் சுட்டிக் காட்டி, ''ஆ! இந்த டின்களைத்தான் சொன்னேன்!'' என்று குதித்தான் பலராமன்.

''இவற்றைத்தானே சொல்கிறீர்? சந்தேகம் இல்லையே?'' என்று கேட்டார் கடைக்காரர்.

''நோ! நோ!''

''இன்ஸ்பெக்டர்! எல்லா டின்களையும் நீங்களே திறந்து பாருங்கள்!'' என்றாள் அந்தப் பெண்.

''இன்ஸ்பெக்டர் ஒரு டின்னைத் திறந்து பார்த்தார். ''இது என்ன பொடி — பிரௌன் கலரில்?''

''நீங்களே முகர்ந்து பாருங்களேன்!''

இன்ஸ்பெக்டர் முகர்ந்து பார்த்துவிட்டுப் பலமாக — ராட்சதத் தும்மல் ஒன்று போட்டார். ''அட சீயக்காய்ப் பொடி போல் அல்லவா இருக்கிறது!''

''சீயக்காய்ப் பொடியேதான்!'' என்று ஆமோதித்தார் கடைக்காரர். ''காகிதப் பையிலே போட்டு விற்கிறதுக்குப் பதிலாக, இப்படி டின்னிலே போட்டால் நிறைய விற்பனை ஆகுதேன்னு பழைய பால் பவுடர் டின்களை வாங்கி இந்த ஏற்பாடு பண்ணினேன்... அதை இந்த ஆள் தவறாகப் புரிஞ்சுகிட்டு....''

''ஹா!'' என்று பெருங் கூச்சலுடன், வேரோடு வெட்டிச் சாய்க்கப்பட்ட மரம் போலத் தரையில் சாய்ந்தான் பலராமன்.

நர்ஸிங் ஹோம் ஒன்றில் அவன் கண் விழித்தபோது அந்தப் பளிங்கு மேனிப் பாவைதான் அருகில் இருந்தாள். ''மன்னியுங்கள் என்னை... காலையில் நீங்கள் 'பையில் என்ன இருக்கிறது?' என்று கேட்டபோதே நான் உண்மையைச் சொல்லியிருந்தால் இத்தனை கலாட்டாவும் நேர்ந்திருக்காது!'' என்றாள் வருத்தம் தோய்ந்த குரலில்.

''வீட்டுச் செலவுக்கு இருக்கட்டும் என்று அப்பாவிடம் சொல்லி மூன்று டின் சீயக்காய் வாங்கிக் கொண்டு போனேன். அதைப் பார்த்துவிட்டு நீங்கள் பால் பவுடர் என்று தப்பர்த்தம் செய்து கொண்டு....''

பாலாஜி கடை முதலாளியின் மகள் அவள் என்பது புரிந்ததும் இரவு நேரத்தில் அவள் திடுதிப்பென்று எப்படி போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தாள் என்ற புதிரும் அவிழ்ந்தது.

கடை முதலாளி போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிருப்பதாகப் பலராமனை முற்றுகையிட்ட கும்பலிலிருந்த யாரோ ஒருவர் அவர் வீட்டில் வந்து கர்ம சிரத்தையாகச் சொல்ல, அதைக் கேட்டுக் காபரா அடைந்து ஓடிவந்திருக்கிறாள் மகள்!

''நல்ல வேளை! நான்பாட்டுக்கு அந்த டின்களை என் முதலாளியிடம்கொண்டுபோய்க் கொடுக்காமல் இருந்தேனே!... முதலாளியின் மனைவி விஷயம் தெரியாமல் சீயக்காய்ப் பொடியைக் கரைத்து மின்னிக்கும், ஜின்னிக்கும் கொடுத்திருப்பாள். இரண்டுக்கும் ஜன்னி கண்டிருக்கும் இந்நேரம்!''

அந்தப் பெண் பதிலேதும் சொல்லாமல் மௌனமாக இருந்தாள்.

''ஏய்! என்ன யோசனை?'' என்று கேட்டான் பலராமன்.

''கவலைதான்!''

''என்ன கவலை உனக்கு? நான்தான் இதோ எழுந்து உட்கார்ந்து விட்டேனே!''

''அதில்லே... இப்போதே பால் பவுடருக்கு இவ்வளவு திண்டாட்டமாக இருக்கிறதே, இன்னும் இரண்டு வருடங்கள் கழித்து....''

''இரண்டு வருடங்கள் கழித்து?''

''நமக்குக் குழந்தைகள் பிறந்தால் என்ன செய்வது என்று...''

''கவலைப்படாதே! நிறைய முருங்கைக் கீரை வாங்கித் தருகிறேன், சாப்பிடு!''

அவனுடைய வார்த்தைகளின் முழு அர்த்தத்தையும் புரிந்து கொண்ட அந்தப் பச்சை நைலக்ஸ் உடுத்திய பளிங்கு மேனிப் பாவையின் முகம் லிப்ஸ்டிக்காகச் சிவந்தது!

# Links the several worlds of women

Every fortnight, Femina reaches out to over two million readers across Asia. It brings to them a discerning, balanced and urbane interpretation of the Indian woman today—and through her, of the country she has helped to change.

Policy-maker, home-keeper or ego-preserver, the Indian woman is, like her counterparts in Asia, destroying old myths and carefully defined roles. She is emerging as the force that motivates much of the change in the sub-continent.

Femina records her life, her changing values, her experiences...every fortnight in colour and black and white.



femina

**A FORTNIGHTLY FOR EVERY WOMAN**

A TIMES OF INDIA PUBLICATION

# உளுந்தும் உவமையும்





பொன்னித்துறைவன்

சீலா மாமிக்கு அறுபதாம் கல்யாணம்னு பத்திரிகை வந்திருக்கு. அச்சடிச்ச பத்திரிகை. கடைசில மாமியே, நேர நின்னுண்டு பேசறாப்ல, ரெண்டு வரி கைப்பட எழுதியிருக்கா. ''அம்பி! நாலு நாள் மின்னாடியே உன் ஆமடையாளையும் அழைச்சிண்டு வந்து சேந்துடு. நீங்க ரெண்டு பேரும் வந்தாத்தான் எங்களுக்குத் திருப்தியா இருக்கும். பசங்களுக்குப் பரீட்சை ஆயிடுத்துன்னு அதுகளையும் கூட்டிண்டு வா''ன்னு எழுதியிருக்கா. நெஞ்சுலே இருக்கிற எண்ணம் ஈரம் உலராம அப்படியே பிறந்த மேனிக்கு வெளிலே வரது ரொம்ப அபூர்வம். மாமிக்கு அத்தினி வெள்ளை மனசு. எண்ணத்துக்கும் பேச்சுக்கும் நடுப்பற பள்ளமே கெடயாது. உறவுகூட இல்லே. எங்கிட்டே அப்படியொரு வாத்சல்யம் எங்கேயிருந்துதான் வந்ததோ?

இவகிட்டே சொன்னேன். 'பெங்களூர் போறப்பறேன், நீயும் வரலாம்'னு கொஞ்சம் விட்டேத்தியாலே கூப்பிட்டேன். வத்புத் திரு மரத்துலே ஏறுகிற குணம்.

கொஞ்ச நாளாவே எங்களுக்குள்ளே அவ்வளவு ஒத்துப் போகலே. சின்னச் சின்ன விஷயத்துக்கெல்லாம் அப்படிச் சண்டை வரது. களேபரமாப் போயிடறது. கோவத்திலே,

அவமாத்தி நா மாத்தி பட்டினி உபவாசம்னு ஒவ்வொரு நாளாப் போறது. கல்யாணமாகி ஆறு வருஷங்களுக்குள்ளே, கடையாணி பிடுங்கின்ட மாதிரி வண்டி அப்படிக் கடகடத்துப் போச்சு. குடை சாயாம தாக்குப் பிடிக்கனுமேங்கிற மும்முரத்துலே, எங்கேந்து கௌம்பினோம், எதுக்காகக் கௌம்பினோம், எங்கே போகணும்ங்கிறதெல்லாம் அடியோட மறந்து போச்சு. இதுலே சுவாரசியம் என்னடான்னு ரெண்டு பேருமே படிச்சவா. இங்கிலீஷிலே சண்டை போடத் தெரிஞ்சவா. ஒழிஞ்ச நேரத்துலே அவ பிரெஞ்சுகூடக் கத்துக்கறா. எனக்கு நேரமிருந்தா நானும் ஜெர்மன் கத்துப்பேன். அவ பிரெஞ்சுலேயும், நான் ஜெர்மன்லேயும் சண்டை போட்டா எப்படியிருக்கும்னு யோசிச்சுப் பார்க்கறேன். ஒரே பாஷையிலேதான் சண்டை போடணும்னு என்ன அவசியம்? சண்டைதான்னு தெரிவிச்சுக்கிற அளவுக்கு ஏதாவது ஒரு பாஷையை உபயோகிச்சண்டா சரி. அடிச்சுக்கப்படாது. அவ்வளவுதானே? என்னைக் கேட்டா, அடிச்சிக்கிறதே தேவலேன்னு தோணறது. அதுலே பசப்பு இல்லே. சுவடு இல்லே. பளிச்சுன்னு காரியம் முடியும்.

ஒண்ணுப் பழகி, ஊரெல்லாம் சுத்தி, ஆசைப்பட்டுத்தான் கல்யாணம் பண்ணின்டோம். கல்யாணத்துக்கு முன்னாடியே ஒருத்தரையொருத்தர் நன்னாத் தெரிஞ்சுக்க வேண்டியது அவசியம், நியாயங்கிற ரீதியிலே அப்படி நெருக்கமாப் பழகினோம். ஆனா, தெரிஞ்சுக்கறது வேறே, புரிஞ்சுக்கறது வேறேன்னு இப்பத்தான் படறது.

கல்யாணமாறதுக்கு முன்னாடி, ரெண்டு பேருக்கும் பொதுவான ருசிகள் நெறைய இருந்ததாகக் காண்பிச்சண்டு ஒருத்தரையொருத்தர் ஏமாத்திண்டு இருந்ததை நெனைச்சா சிரிப்பு வரது. மண வாழ்க்கையை ரொம்ப ஸயண்டிபிக்கா 'அப்ரோச்' பண்றமாதிரி ஒரு வெளிப்பூச்சு. அந்த நேரத்துலேயெல்லாம் ஒரு முரண்பாடு கண்ணுலே படணுமே! நோ. மருந்துக்குக்கூடக் கெடையாது. அவ என்ன சொன்னதும் எனக்குச் சம்மதம். நான் சொல்றதெல்லாம் அவளுக்கு வேதவாக்கு. ஆனா, உள்ளூற ரெண்டு பேருக்குமே ஒரு ஜாக்கிரதை; சந்தேகம்; வேவு பார்க்கற நோட்டம். சுப வேளையிலே தும்மக் கூடாதுன்னு மூக்கைக் கசக்கிண்டு தவிக்கிற திண்டாட்டம். அந்தத் திண்டாட்டத்துக்குப் பெரிய பெரிய பேரெல்லாம் வச்சு, அதைச் சுத்தி ஒரு இலக்கியமே வளர்ந்துட்டதை நெனைச்சா நெஞ்சைப் பிழியறது.

ஆனா, அந்த மூணு முடிச்சு விழுந்த உடனே எங்கேந்துதான், ஒருத்தர் மாத்தியொருத்தரா, இடைவெளியே இல்லாம இப்படியொரு அடுக்குத் தும்மல் வரதோ!

இவளை நெனைக்கிறபோதெல்லாம் சீலா மாமியின் ஞாபகம் வரது. மனக்கிலே வியவஸ்தை கெடையாது. இல்லேன்னா, கொஞ்சம்கூடச் சம்பந்தமில்லாத ரெண்டு மனுஷாளைப் பத்தி ஒரே சமயத்துலே நெனப்பு வருவானேன்? இவ எங்கே, அந்த மாமி எங்கே?

சீலா மாமி மணையிலே இருக்கறப்போ இவளையும் அழைச்சிண்டு போய் நமஸ்காரம் பண்ணணும்னு எனக்கு ஆசை. இவளுக்கோ நமஸ்காரம்னாலே பிடிக்காது. ''ஹாய்! ஹௌ டு யு டூ?'' ஜாதி. அவளைச் சொல்லியும் குத்தமில்லே. விழுந்து நமஸ்காரம் பண்றது சுயமரியாதைக்குக் கொறச்சல்னு நானே நெனச்ச காலமுண்டு. எங்களுக்



குள்ளிருந்த பொதுவான கொள்கைகளுக் குள்ளே இந்த வக்கரிப்பும் ஒண்ணு.

எல்லாத்தையும் சொல்லி ஆத்திக்கணும்னு தோணறது. இவ நமஸ்காரம் பண்ணும் படியா ஆயிடப் போறதேன்னு, ஆறு வருஷங் களுக்கு முன்னாடி, எங்க முகூர்த்தமான கையோட மத்தியான வண்டியிலேயே ஹனி மூனுக்குக் கௌம்பினது ஞாபகத்துக்கு வரது. தும்மலே அடக்கிண்டு இவ சொல்றபடியெல் லாம் ஆடியாச்சு. வெக்கக்கேடு.

சீலா மாமியோட அருமை இவளுக்கு என்ன தெரியும் ? பத்திரிகை வந்த அன் னிக்கு இவ அந்த மாமி பேரை உச்சரிச்சதே எனக்குப் பிடிக்கலே.

''ஹூ ஈஸ் இஸ் ஷீலா மாமி ?''

''ஷீலா இல்லே, சீலா — ''

''ஷீலா ?''

''நான்ஸென்ஸ்...... வாயிலே என்ன மெல்றே ?''

இப்படியே பிடிச்சுண்டுது. தெரிஞ்ச இங்கி லீஷ் வார்த்தையெல்லாம் ஒண்ணோட ஒண்ணு மோதிண்டு எங்க கண் முன்னாடியே பொடிப் பொடியா உதிர்ந்து போச்சு.

இவகிட்ட ஒரு பெரிய விஷயம் என்னன்னு, அழமாட்டா. எவ்வளவு சண்டை போட் டாலும் அழமாட்டா. எனக்கு அது பெரிய குறை. குறைன்னு சொல்றதுகூடச் சரி யில்லே. சவால். பொண்ணுக்குள்ள ஒரே ஆயுதத்தை அவ உபயோகிக்காதது பாந்தமா இல்லாததோட, பயமாக்கூட இருந்தது. சமயத்துலே, யார் ஆம்பிளேங்கிற சந்தேகங் கூட வந்துடும்.

உண்மையிலே சீலா மாமியை இவளுக் குத் தெரியும். பேரு வேணு மறந்து போச்சோ என்னவோ ? என் மனுஷாளோட பேரை ஞாபகம் வைச்சுக்கறதுலேகூட அவளுக்கு அத்தனை அசிரத்தை.

கல்யாணமான புதுசு. இவளும் என்கூட வந்திருந்தா. ஹனிமூனுக்குப் பெங்களூர் போன போது, சீலா மாமி எங்களே ஒரு நாள் சாப்பிடச் சொல்லியிருந்தா. இலையிலே உட் கார்ந்து சாதம் பரிமாறியாச்சு. நெய்ப் பாத் திரத்தை எடுத்துண்டு வந்த மாமி, 'மாப்ளே சார், கையைக் குழிச்சிக்குங்கோ. புத்துருக்கு நெய். ஸ்பெஷலா காச்சினே'ன்னு நெய்யைக் கரண்டி கரண்டியா ஊத்தினா. 'அப்படியே குடிடா. சாதத்துக்கு வேறே ஊத்தறேன்' அப்பகன்னு. குடிச்சேன். உடம்பை என் னமோ பண்ணித்து. இவளைப் பார்த்தேன். அவளும் என்னமோ மாதிரி முழிச்சா. ஒரு வழியா சாப்பாடு முடிஞ்சுது. நான் சீலா மாமியைக் கூப்பிட்டு ஒரு சந்தேகம் கேட் டேன்.

''ஏன் மாமி! உங்க சொந்த ஊர் எது?''

''ஏண்டாப்பா ? தஞ்சாவூர் பக்கந்தான். எதுக்குக் கேக்கறே ?''

''இல்லே, புது மாப்பிள்ளேக்கு இப்படி யெல்லாம் செய்யணும்னு உங்க ஊர் வழக்கம் போலிருக்கு. கையைக் குழிச்சிக்கச் சொல்லிக் கரண்டி கரண்டியாக் கவுத்தேளே, அதைச் சொல்றேன்.''

''நல்ல புள்ளேடா நீ ! எப்பவோ வரே. நல்ல நெய்யாக் காய்ச்சிப் போடக் கூடாதா ?''

'' நெய்யா ?''

''அதிலே என்னடா, சந்தேகம் ?''

''மாமி ! ஏதோ பிசகு நடந்திருக்கு. அடுக்களேலே போய்ப் பாருங்கோ. நீங்க ஊத்தினது சுத்தமான நல்லெண்ணெய்.''

''என்னடா சொல்றே நீ ?''

'' நெஜமாத்தான் மாமி. போய்ப் பாருங்கோ.''

பரக்கப் பரக்க ஓடினாள் மாமி. 'அடி பாவி'ன்னு சமையலுள்ளேந்து கிரீச்னு கத்தினது காதுலே விழுந்தது. திரும்பி வந்தா. ''அம்பி! அநியாயம் நடந்துடுத் துடா. நல்லெண்ணெயேதாண்டா அம்பி ! நல்லெண்ணெயேதான். ஏண்டா, ஒரு வார்த்தை சொல்லக் கூடாதாடா ? நீ வேத்து மனுஷனா ? இப்படி மங்கு மங்குனு நல்லெண்ணெயை விடாம குடிச்சிருக் கேளே''ன்னு சொல்றபோது அழவே அழு துட்டா. ''நல்லெண்ணெய்தானே, விஷ மில்லையே. இதுக்குப் போய் இப்படி வருத்தப் படறேளே''ன்னேன். கண்ணைத் தொடைச் சிண்டு மாமி சொன்னா :

''பொண்ணாப் பொறந்ததுக்கு நாக்கைப் பிடுங்கிண்டு சாகலாம் போலிருக்குடா, அம்பி! கல்யாணம் ஆகி மொத மொதல்லே வந்திருக்கே. இப்படியா பண்ணுவேன் ? நடந்ததைச் சொல்றேன், கேளு. என் மூத்த குட்டி மைதிலி இருக்கா பாரு. அவ செஞ்ச வேலை இது. நெய்க் கிண்ணம் நெறைய நல் லெண்ணெயை நெரப்பி வைச்சிருக்கா. எதுக்குத் தெரியுமோல்லியோ?''

''தெரியலியே. சொல்லுங்கோ.''

ராஜாக்களுக்குச்

சீட்டு

கிழிந்தது !

சீனாவில் தயாராகும் சீட்டுக் கட்டுகளில் 52 சீட்டுகளுக்குப் பதில் 48 சீட்டுகள்தான் உள்ளன. காரணம், நான்கு ராஜாச் சீட்டுக்களையும் அவர்கள் நீக்கி விட்டது தான்.

ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும்
ஏற்படும்போது வெட்கப்படுங்கள்
அல்லது . . .



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் 'தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்



ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய கனிவான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம். மென்மையான ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர்- இந்த க்ரீமை வேண்டாத 'ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது... வாரக்கணக்கில் பட்டுப்போல் மென்மை-தொட்டுப் பார்த்தால் மழமழப்பு... பெண்மையின் கனிவைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு; ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!

## ஆன் பிரெஞ்ச்

ஹேர் ரிமூவர்




**அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்**

2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffrey Manners & Co. Ltd.

126 HR 202 Tam

---

1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D.கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

## ஆயுர்வேதாஸ்ரமம்

பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

## ஹெடன்ஸா

களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

Bensons-2141 TAM

''சனிகவரன் கோயிலுக்குப் போய் வெளக்குப் போட. அதைக் கொண்டு வந்து உனக்கு ஊத்திருக்கேன்.''

எல்லோரும் கொல்லுனு சிரிச்சா. வீடே சிரிச்சுது. நானும் சிரிச்சேன். நாசூக்காப் பேசணுங்கிறதுக்காக உண்மையை மறைக்கத் தெரியாத அப்படியொரு வெள்ளை மனசு.

அதுக்கு அடுத்தபடியா மாமி சொன்னது தான் என்னை ஓர் உலுக்கு உலுக்கிடுத்து.

''அம்பி ! விதுரர் வீட்டுக்குக் கிருஷ்ண பகவான் வந்தபோது சந்தோஷத்திலே தம்மையே மறந்து, பழத்தைக் கொடுக்கறோம்னு நெனைச்சிண்டு தோலியை ஊட்டினார் பாரு ? கிருஷ்ணனும் விடாம அதைச் சாப்பிட்டார் பாரு ? அது மாதிரி இன்னிக்கு இங்கே நடந்திருக்கு. நெய்யினு நல்லெண்ணெயை நானும் பரு காரியமா ஊத்தியிருக்கேன். நீயும் வாங்கி வாங்கிக் குடிச்சிருக்கே ! இந்தக் கூத்தை எங்கே போய்ச் சொல்றது ? இப்படியும் ஒலகத்துலே நடக்குமாடா, அம்பி ?''

இதைக் கேட்ட உடனே எனக்கு உடம்பெல்லாம் சிலுத்துப் போச்சு. சாஷ்டாங்கமா மாமி கால்லே விழுந்தேன். கண்ணெல்லாம் குளமாயிடுத்து.

இவனுக்கு ஒரே கிண்டல்; இளக்காரம். இருக்கட்டுமே. ஐ டின்ட் கேர்.

விதுரரைப் பத்தி இவனுக்கு என்ன தெரியும்? வாட்டர்கேட்டைப் பத்தி வேணாத் தெரியும்.

மாமியோட கால் தூசுக்கு இதுகள்ளாம் பொறுமா? மாமி அந்தத் தலைமுறைச் சங்கிலியின் கடைசி கரணை. இதுகள் ?

வரமாட்டாள்னே எண்ணிண்டு கடைசியா ஒரு தடவை கூப்பிட்டேன். போசுக்குனு வரேன்னுட்டா. அன்னிக்கு 'மூட்' அப்படி. பெங்களூருக்குக் கௌம்பினோம்.

சிலா மாமியை மனையிலே பார்க்கறபோது மெய் சிலுத்தது. தெய்வ சந்நிதியிலே இருக்கற மாதிரி உடம்பெல்லாம் என்னமோ பண்ணித்து. அந்த முகத்துலே, தனக்குள்ளே தானா எப்போதும் பூரிச்சிண்டிருக்கற மாதிரி நிரந்தரமான புன்னகை. நெறைஞ்ச மனசு. இத்தனைக்கும் மாமிக்கு இருந்த பிக்கல் பிடுங்கல் யாருக்கும் இருக்க முடியாது. நாட்டுப் பெண்ணா பதினெட்டு வயசுலே அந்த வீட்டுலே காலடி வைச்சா. இன்னிக்கும் மாட்டுப் பெண்ணாத்தான் இருக்கா. எண்பத்தஞ்சு வயசு மாமியார் படுத்த படுக்கையா இருக்கா. பெரிய கூட்டுக் குடும்பம். நிர்வாகம் பூரா மாமிதான். ஆம்படையான் பரப்பிரம்மம். எதுலேயுமே பட்டுக்காது. எல்லாத்தையும் தானே நிர்வாகம் பண்ணினாக்கூட, சாவிக் கொத்தை இடுப்பிலே சொருகிண்டு கூடத்து ஊஞ்சல்லே வேகு வேகுன்னு ஆடற குணமெல்லாம் கெடயாது. மாமி இருக்கற இடமே தெரியாது. வேத்து மனுஷா யாராவது வந்துட்டாலோ, அடுக்களையைவிட்டு வெளிலே வரமாட்டா. அங்கேந்தே, போர்த்தின தலைப்போட எட்டிப் பார்ப்பா. ராமன், தியாகராஜ ஸ்வாமிக்குத் தரிசனம் கொடுக்கற மாதிரி எழுதின படத்துலே, அவாத்து மாமி உள்ளேந்து எட்டிப் பார்ப்பாளே, அது மாதிரி.

கல்யாணச் சந்தடி எல்லாம் ஓஞ்சு மாமியை தனியா சந்திச்சேன். நேரம் போனதே தெரியாம பேசினோம். இவ லால் பாக் போறேன்னு கௌம்பிட்டா. இவளைப் பத்தியும் மாமி கிட்டே சொன்னேன். ஒண்ணும் சுவாரசியமாக இல்லேங்கிறதை விஸ்தாரமாவே சொன்னேன். கல்யாணத்துக்கு முன்னாடியே நன்னாப் பழகியும் ஒண்ணும் பிரயோசனமில்லாம போயிடுத்தேன்னு நொந்துண்டேன். படிப்புனாலே விசேஷ சௌகரியம் ஒண்ணுமில்லேன்னு சொன்னேன். சின்னச் சின்ன பிரச்னைகளெல்லாம் எப்படி மாபாரதமாப் போயிடறதுன்னு சொன்னேன். நெஞ்சையடைச்சுது. அழுதாக்கூடத் தேவலை போல் இருந்தது.

பட்சணத்தையெல்லாம் சின்னச் சின்ன பொட்டணமா கட்டிண்டே நான் சொன்னதையெல்லாம் மாமி கேட்டுண்டா. 'ஆச்சா, இன்னும் பாக்கி இருக்கா'ங்கிற மாதிரி ஒரு பார்வை பார்த்தா. அப்புறம் சொன்னா :

'' அம்பி! நீ சொன்னதைக் கேட்க ரொம்ப வருத்தமா இருக்கு. நீ தப்பா நெனைச்சிக்கமாட்டேன்னா எனக்குப் படறதைச் சொல்றேம்பா....''

''சொல்லுங்கோ மாமி. என்ன இப்படிக் கேக்கறேள் ?''

'' தனித் தனியான ரெண்டு அகங்காரத்தை, மூச்சு முட்ட முட்ட ஒரே டப்பாவுக்குள்ளே அடைச்சு வைக்கறதுதான் கல்யாணம்னு தோணறது. எங்க காலத்துலே அந்த ரெண்டுலே ஏது தணிஞ்சு போகணும்னு ஒரு சட்டம் இருந்தது. இப்போ, பல காரணத்துனாலே அந்தச் சட்டம் செல்லாம போயிடுத்து. அப்படிச் செல்லாம அடிச்சது ரைட்டா, தப்பான்னு அடுத்த தலைமுறைக்குத்தான் புரியும். ஆனா, இப்போ உங்க தவிப்பைப் பார்க்கும்போது வேதனையா இருக்கு. என்ன சொல்றதுன்னு புரியலே. நீங்களேதான் இதுக்கு ஒரு வழி கண்டுபிடிச்சிக்கணும். ஆனா, ஒண்ணு வேணா சொல்லலாம். எனக்குத் தெரிஞ்ச அடுப்பங்கரை பாஷையிலேதான் சொல்லுவேன். சிரிக்காதே. ஒண்ணு அரிசியாவும் இன்னொண்ணு உளுந்தாவும் சரியான வீதத்துலே இருந்தாத்தான் இட்லி பூப்போல இருக்கும். இப்பொல்லாம் ரெண்டும் அரிசியாவே இருக்கு ! இதை நீ எப்படிப் புரிஞ்சுக்கறயோ புரிஞ்சுக்கோ. சிரிக்காதே. கோவிச்சுக்காதே. எனக்குப் பட்டதைச் சொன்னேன். உளுந்து சேர்ந்தாத்தான் மென்மை வரும். உங்களுக்குள்ளே யார் உளுந்தாவும் யார் அரிசியாவும் இருக்கணுங்கிறதை உங்க சவுகரியத்துக்குத் தகுந்த மாதிரி நீங்களே முடிவு பண்ணிக்க வேண்டியதுதான். என்னடா அம்பி, புரியறதா ?''

மாமி அவ பாஷையிலே பேசிட்டா. அடுப்பங்கரை பாஷை. அவ சொன்ன விஷயம் ரொம்பப் பெரிய விஷயம். நிதானமா மனசுலே இறக்கிண்டிருக்கேன். ஊருக்குப் போய் இவளோட டிஸ்கஸ் பண்ணணும். ஆனா, நானே உளுந்தா இருக்கறதாக முடிவு பண்ணிட்டா, டிஸ்கஷனுக்கே அவசியமில்லே.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)